# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௭ ] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௩, ஐப்பசி Nov. '82 [பரல்-௩

---

## "செந்தமிழ்ச் செல்வி"

## விளம்பரக் கட்டணம்

## ADVERTISEMENT TARIFF

| | |
|---|---|
| மேலட்டை 4ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Back Wrapper 4th Page) | ரூ. 100/- |
| மேலட்டை 3ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Wrapper 3rd Page) | ரூ. 80/- |
| முழுப் பக்கம் (உள்ளே) (Full Page-Inside) | ரூ. 60/- |
| அரைப் பக்கம் (உள்ளே) (Half Page-Inside) | ரூ. 40/- |

---

"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம்:

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம்:

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு ௫௭ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௩, ஐப்பசி நவம்பர் 1982 | பரல் ௩


## கழகத்தின் அகரவரிசைப் பணி

ஒரு மொழியின் வளர்ச்சியை அறிய உதவுவது அம் மொழியில் வெளிவந்துள்ள அகரவரிசைகள் என்னும் அகராதிகளே ஆகும். இவை சொற்களின் பொருளை உணர்த்துவதற்காகத் தொகுக்கப் பெறுபவையே எனினும் அம் மொழியின் சொல் வளத்தையும் பொருள் வளத்தையும், சுருங்கக் கூறின் அம் மொழியின் வரலாறு, பண்பாடு, தொன்மை முதலிய பல செய்திகளையும் எடுத்துக் காட்டுபவையாம்.

ஒரு சொல்லுக்குப் பல பொருள்களிருப்பினும் மக்கள் பொதுவாகச் சில பொருள்களில் மட்டும் அச் சொல்லைப் பயன்படுத்துவர். அச் சொல்லுக்குள்ள பிற பொருள்களை மறந்துவிடுவர். சில சொற்கள் காலப் போக்கில் தாம் முன்பு குறித்த பொருளுக்கு நேர்மாறான பொருளையும் தரும். ஒரு மொழியுடன் இன, வரலாற்று, பண்பாட்டுத் தொடர்புடைய பிற மொழிகளிருக்கும்போது அவ்விரு மொழிகளுடைய தொடர்பைக் காட்டவும் ஒரு மொழியின் வேற்று மொழியை அறிந்துகொள்ளவும் நேரிடும். இவ்வாறு பல்வகைப் பயன்களைத் தருபவை அகராதிகளாகும்.

இவற்றின் சிறப்பைக் கருதியே அண்மையில் தில்லி சவகர்லால் நேரு பல்கலைக் கழகத்தில் 'அகராதித் தொகுப்பாசிரியர்களின் கருத்தரங்கு' கூட்டப்பெற்றது. கழக நூலாசிரியரும் ஈரோடு வாசவி கல்லூரிப் பேராசிரியருமான திரு. மு. சதாசிவம் அவர்கள் இக் கருத்தரங்கில் கலந்துகொண்டு உரை நிகழ்த்தியுள்ளனர். தமிழ் மொழியில் பலவேறு வகையான அகராதிகள் வெளிவந்துள்ளமையினையும் அவற்றில் அவரே பல வகையான அகராதிகளைத் தொகுத்துள்ளமையினையும் கருத்தரங்கில் கலந்துகொண்டோர் வியந்து பாராட்டியுள்ளதுடன் அடுத்து லண்டனில்

நடைபெறவிருக்கும் உலக அளவிலான அகராதிக் கருத்தரங்கிற்கு அவரை அழைத்திருக்கின்றனர்.

தமிழில் சொற் பொருளைத் தனித்துக் கூறும் பாங்கு தொல்காப்பியத்திலேயே காணப்படுகிறது. அதிலுள்ள 'உரியியல்' அகராதியின் முன்னோடியே. 'சாயல் மென்மை'. 'மாதர் காதல்' 'புலம்பே தனிமை' போன்ற நூற்பாக்கள் சொற்பொருளை எளிதில் உணர்த்தி நிற்கின்றன. பிற்காலத்தில் நிகண்டுகள் தோன்றலாயின. மேனாட்டுப் பாதிரிமார் தமிழகத்திற்குப் போந்தபோது மேனாட்டு முறையைப் பின்பற்றிப் புதுமுறை அகரவரிசைகளைப் படைக்கலாயினர்.

அகரவரிசைகளின் இன்றியமையாமையைக் கருத்தில் கொண்டு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பல்வகைப் பயனுடைய அகரவரிசைகளை வெளியிட்டுள்ளது. கழகம் வெளியிட்டுள்ள அகரவரிசைகளுக்கும் பிற அகரவரிசைகளுக்கும் உள்ள பெரிய வேற்றுமை மொழித் தூய்மையாகும். ஒரு மொழியின் வளர்ச்சியில் பஃவேறு மொழிச்சொற்கள் கலப்பதுண்டு. சில தவிர்க்க முடியாத சூழ்நிலைகளில் பிற மொழிச் சொற்களைக் கையாளுவதில் தவறில்லை. ஆனால் தாய்மொழியில் ஒரு சொல்லிருக்க அதைக் கையாளாது, அதை அழித்துவிட்டு வேற்று மொழிச் சொல்லைக் கையாளுவது அம் மொழிக்குச் செய்யும் பெருந் தீங்காகும். இதனை மொழிக் கொலை என்றே குறிப்பிடலாம். ஆனால் சிலர் இதனைத் தனிமொழி வெறி என்றும் சொல்வர். தமக்கெனக் கைகால்களிருக்க அவற்றை வெட்டித் தனியே வைத்துவிட்டுச் செயற்கைக் கை கால்களை அமைத்துக்கொள்வாருண்டோ ?

கழகம் தமிழ்—தமிழ் அகரவரிசை, தமிழ்—ஆங்கில அகரவரிசை, ஆங்கிலம்—தமிழ் அகரவரிசை போன்று பல அகரவரிசை நூல்களை வெளியிட்டுள்ளது. கிடைத்தற்கரிய பழைய நிகண்டுகளில் சேந்தன் திவாகரம், பிங்கல நிகண்டு, உரிச்சொல் நிகண்டு ஆகியவற்றைப் புதிய முறையில் தெளிவான வகையில் கழகம் பதிப்பித்துள்ளது.

அகரவரிசைகளில் முதன்முதல் பழந்தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களனைத்தையும் முறையாக, ஒரு சீராக வெளியிட்டுள்ள கழகம் பழந்தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களைப் பயில்வார்க்குப் பயன்படும் வகையில் அவற்றில் பயின்று வரும் அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறும் வகையில் '**கழகத் தமிழ்க் கையகராதி**' என்ற நூலை வெளியிட்டுள்ளது. அரிய சொற்களடங்கியதாலும் கையடக்கமாக உள்ளதாலும் புலவர் பெருமக்களால் இது பெரிதும் வரவேற்கப்பெறுகிறது.

புலவர்கட்கும் மாணவர்கட்கும் பயன்படும் வகையில் தமிழ்—தமிழ் அகராதியை வெளியிட எண்ணிக் 'கழகத் தமிழ் அகராதி'யை அது வெளியிட்டுள்ளது. இவ்வகராதியின் சிறப்பு கூடிய வரை வழக்கிலுள்ள சொற்கள் அனைத்திற்கும் பொருள் தருவதுடன் கூடிய வரை வழக்கிலுள்ள சொற்களுக்கு வழக்கிழந்து போன தனித்தமிழ்ச் சொற்களையும் பல்வேறு இலக்கியங்களிலிருந்து தொகுத்துக் கொடுக்கப் பெற்றுள்ளதாகும். தமிழ் மறுமலர்ச்சிக்கு உதவும் வகையில் இவ் அகரவரிசை தொகுக்கப்பெற்றுள்ளது. இன்றியமையாத இடங்களில் வழக்கிலுள்ள பிற மொழிச் சொற்கள் சேர்க்கப்பெற்றுள்ளன.

இதுவரை வந்துள்ள ஆங்கிலத் தமிழ் அகராதிகளில் தனிச்சிறப்பிடம் பெற்று விளங்குவது பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் அவர்கள் தொகுத்துக் கழகம் வெளியிட்டுள்ள 'கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி' ஆகும். இது பேரளவில் கையகராதி என்றிருப்பினும் உருவ அளவில் (சட்டைப்) பையகராதியைவிடப் பெரியதாகும். பெயரில் மட்டுமன்று, பொருளடக்கத்திலும் குறுகத்தறித்த குறளைப்போல் பெருமையுடையதாகும். இதன் தனிப்பெருஞ் சிறப்பு ஆங்கிலச் சொற்களுக்கான சரியான பொருளை வெளிப்படுத்துதற்குக் கூடியவரை வழக்கிலுள்ள சொற்களையொட்டித் தனித்தமிழ்ச் சொற்களைப் பன்மொழிப் புலவர் அவர்கள் ஆக்கித் தந்திருப்பதுதான். குறிப்பாகத் தமிழ் மொழிக்குப் புதியனவாய அறிவியல், பொருளியல், அரசியல், ஆட்சியியல் போன்ற பிறதுறைச் சொற்களுக்குப் பன்மொழிப் புலவரவர்கள் படைத்துத் தந்திருக்கிற புதிய சொற்கள் தமிழ் மொழியின் பொருளாழத்தையும் வேர்ச்சொல் வளத்தையும் எடுத்துக்காட்டுவதாக உள்ளன.

இத் துறைகளில் தமிழில் நூல்களெழுதும் பேராசிரியர் பெருமக்கட்கு இவ்வகராதி பெருந்துணை புரிகின்றது. சென்னைப் பல்கலைக்கழகம் விரிவான அளவில் ஆங்கிலத் தமிழ் அகராதியை உருவாக்கியபோது இதனை முன்மாதிரியாகக் கொண்டது. இருப்பினும் கழக அகராதிக்குள்ள தனிச்சிறப்பு ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழாக்கம் செய்தபோது அதனைக் கருத்துவிளக்கச் சொற்றொடராய்த் தராமல் கருத்துச் செறிவான தனிச் சொல்லாக, எளிதில் எடுத்துக் கையாளும் அளவிற்குக் கலைச் சொல்லாகத் தந்துள்ளதாகும். இதனை அறிஞர் பலரும் போற்றுகின்றனர்.

தமிழக அரசு தமிழ்மொழியை ஆட்சிமொழியாக ஆக்குவதற்கு இவ்வகராதியிலுள்ள ஆட்சிமொழிச் சொற்களின் தமிழாக்கச் சொற்கள் எளிமையும் எளிதில் எடுத்துக் கையாளுதற்

கேற்ற தன்மையும் பெற்றிருப்பதால் இதனை அரசின் எல்லாத் துறைகளும் வாங்கிப் பயன்படுத்த வேண்டுமென்ற ஆணையைப் பிறப்பித்துள்ளது. குறிப்பாகத் தமிழ் வளர்ச்சித் துறையின் இயக்குநராகத் திகழும் பேராசிரியர் டாக்டர் மா. நன்னன் அவர்கள் ஒவ்வொரு துறைக்கும் ஆய்வுக்குச் செல்லும்போது இதனை வலியுறுத்தி வருகின்றனர்.

ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாகப் பயிலும் பள்ளி கல்லூரி மாணவர்கட்கும் இது பெரிதும் பயன்படுகிறது.

குறிப்பாக மாணவர்கட்குப் பயன்படுவதற்கென்றே அவர் களுக்குத் தேவையான ஆங்கிலச் சொற்களை மட்டும் தொகுத்து அவற்றுக்குரிய தமிழ்ச் சொற்களையும் தொகுத்துத் தருவது 'கழகச் சிற்றகராதி'யாகும். இது கைக்குள் அடங்கும் அளவில் சிறிய வடிவினதாம்.

ஆங்கிலம் நம் நாட்டை முந்நூறு ஆண்டுகட்குமேல் ஆட்சி செய்து வந்தது. எனவே நம் வாழ்க்கையில் பல துறை களில் ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்தி வருகிறோம். அவற் றுக்குரிய தமிழ்ச்சொற்களை எந்த அகராதிகளிலும் பார்த்துக் கொள்ளலாம். இருப்பினும் ஒரு துறையை எடுத்துக் கொண் டால் அது தொடர்பான சொற்களை ஒரு சேர எந்த அகராதி யிலும் காண இயலாது உலகத்து அறிவுத் துறைகளின் உயர் கருத்துகளையெல்லாம் தமிழிலே நினைந்து பழகி அறிவாக் கத்தை இளைஞர்கள் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்ற நோக் கத்துடன் தொகுக்கப்பெற்ற அகராதி 'பல்பொருள் ஆங்கிலத் தமிழ் அகரவரிசை'யாகும்.

இதன் தனிச்சிறப்பு என்னவென்றால் ஒவ்வொரு தலைப்பின் கீழும் அத் தலைப்புக்குரிய பெரும்பாலான ஆங்கிலச்சொற்கள் அவற்றுக்கிணையான தமிழ்ச்சொற்களுடன் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன இதில் எண்பத்திரண்டு தலைப்புகளில் ஒவ் வொன்றிலும் நூற்றுக்கணக்கான பெயர்கள் உள்ளன. எடுத்துக் காட்டாக ஆட்பெயர்கள் என்ற தலைப்பில் உலகத்தில் உள்ள தொழில்களில் 632 தொழில்கள் செய்வார் பெயர்கள் அகரவரிசைப் படுத்திக் கொடுக்கப்பெற்றுள்ளன. நோய்கள் என்ற தலைப்பில் 387 நோய்கள் ஆங்கிலத்திலும் தமிழிலுமாகத் தரப்பெற்றுள்ளன. இவ்வாறு எல்லாத் தலைப்புகளுமே மக்களுக்கு அன்றாடப் பழக்கத் திற்கு இன்றியமையாத தலைப்புகள். இவற்றைப் பேராசிரியர்கள் மு. சதாசிவம், சிவ. சிவராமலிங்கம் இருவரும் இணைந்து தொகுத் தளித்துள்ளனர்.

(தொடரும்)

—**—

# தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம்

செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 57 பரல் ஒன்றில் 'நனவாகிய கழகத்தின் கனவு' 'தமிழ்ப் பல்கலைக் கழகம்' என்று தலைப்புக் கட்டுரை எழுதப்பெற்றுள்ளது.

திராவிட மொழிகள் பேசும் நான்கு மாநிலங்களும் ஒன்றாக இணைந்திருந்தபோது ஏற்பட்டது, சென்னைப் பல்கலைக் கழகம்.

செட்டிநாட்டுப் பேரரசர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் முதற்கண் தமிழ்ப் பல்கலைக் கழகமாக அமைக்க எண்ணிய கருத்தும் 'அண்ணாமலைப் பல்கலைக் கழகம்' என்ற பெயரில் செயற்படத் தொடங்கிவிட்டது.

பிறகு மதுரையில் பல்கலைக் கழகம் ஒன்றை நிறுவக் கருதிய தமிழரசு பின்னர் அதனுடன் இராமநாதபுர மாவட்டத்துக்குப் புகழ் ஈட்டித் தந்த அரசியல் மேதை திருமிகு 'காமராசர்' திருப் பெயரை அதனுடன் இணைப்பது மிகப் பொருத்தமாகும் என்று கருதி 'மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்' என மாற்றஞ் செய்து நடைபெற்று வருகிறது.

அண்மையில் தமிழரசு பாரதிதாசன் பல்கலைக் கழகம் ஒன்றைத் திருச்சியிலும், கவி சுப்பிரமணிய பாரதியார் பல்கலைக் கழகம் ஒன்றைக் கோவையிலும் அமைத்துள்ளது.

பேரறிஞர் அண்ணா பெயரில் கிண்டியிலுள்ள பொறியியற் பல்கலைக்கழகம நடைபெறுவது சாலப் பொருத்தமே.

தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழிப் புலமையும் பெற்றுப் பிறமொழி கலவாமல் தமிழால் எதனையும் எழுத முடியும் என்று நூல்களை எழுதியதோடு தமிழ்நாட்டில் இந்திமொழி புகுத்தப்பெற்றபோது இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் ஈடுபட்டு 'இந்தி பொது மொழியா' என்ற நூலைப் பதினையாயிரம் படிகட்கு மேல் அச்சிட்டுப் பரப்பித் திறந்தவெளிகளிலும் இந்தியினால் தமிழ்மொழிக்கு ஏற்படும் கேட்டினை விளக்கி எழுதிச் சிலர் சிறை செல்லவும் ஏற்பட்டமை நன்கு அறிந்ததே. செந்தமிழ் மொழிக்குத் தஞ்சை நாகையில் பிறந்த மறைமலையடிகளார் தாம் ஆராய்ச்சிக்குத் தொகுத்த 4000க்கு மேற்பட்ட பல துறை ஆங்கில நூல்களைப் பொதுமக்கட்குப் பயன்படும்படி தாம் விருப்ப ஆவணம் எழுதிவைத்தனர். 1958இல் சென்னை இலிங்கிச் செட்டித் தெரு

வில் இராமலிங்க வள்ளலார் தமது ஒன்பதாவது அகவையில் முதன் முதல் சொற்பெருக்காற்றிய சோமு செட்டியார் இல்லமே மறைமலையடிகளார் நூல்நிலையம் நடைபெற அமைந்தமை திருவருட் செயலே.

தஞ்சை மாவட்டம் நாகையில் பிறந்த 'தனித் தமிழ்த் தந்தை மறைமலையடிகளார் திருப்பெயர்' தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தோடு இணைக்கப்பெறுவது சாலப் பொருத்தமாகும். இதனை அறிஞர் சிலர் நினைவூட்டி வருகின்றனர்.

மலைமேலிட்ட விளக்குப்போல் சென்னை இலிங்கிச் செட்டித் தெருவில் மறைமலையடிகள் நூல்நிலையம் விளங்குவதும் அதன் மாடியில் 'வள்ளலார் திருவருள் மண்டபம்' அமைக்கப்பெற்றிருப்பதும்கண்டு பல்துறை ஆராய்ச்சிக்குவரும் மாணவர்களும் அறிஞர்களும் போற்றி வருகின்றனர்.

எனவே தஞ்சைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக அமர்ந்திருக்கும் என் மனத்திற்கினிய நன்மதிப்பினைப் பெற்ற டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் 21—8—1961இல் கழகம் நடத்திய ஆயிரத்தெட்டாவது வெளியீட்டு விழா மலரில் ஆங்கிலத்தில் எழுதிய பாராட்டுரையின் வழிக் கழகம் தமிழ்மொழிக்குச் செய்துவரும் சீர்மிகு பணியினை நன்கறிந்து மகிழலாம்.

இறைவன் திருவருள் பெருகுக.

—வ. சுப்பையா

---

## திரு. வி. க. நூற்றாண்டு விழா

சென்னை நக்கீரர் கழகம் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி இவற்றின் சார்பில் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களின் நூற்றாண்டு விழா ஏ. ஆர். சி., கே. ஆர். சி. மகளிர் பள்ளியில் 1—11—82-ல் திருமதி சகுந்தலா அம்மையார், பி. எசி., பி. டி., அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. அரு. சங்கரலிங்கம், பி. எசி., அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். திருவாளர் எஸ். ஸ்ரீபால், ஐ. பி. எஸ்., அவர்கள் சிறப்புரை ஆற்றினர். திரு. வி. டி. வீரப்பன், பி. ஏ., பி. எல், அவர்கள் திரு. வி. க. படத்தினைத் திறந்துவைத்தார். டாக்டர் ஔவை நடராசன் அவர்கள் கட்டுரைப் போட்டியில் பரிசு பெற்றோர்க்குப் பரிசுகள் வழங்கினர். திரு. கா. ஏ. அருணாசலம், எம். ஏ., பி. காம்., திருக்குறள் தொடர் சொற்பொழிவுகளைத் தொடங்கி வைத்தார். திரு. பூ. சுப்பிரமணியம், எம். ஏ., பி. டி. பி. லிட்., நன்றி நவில விழா இனிது முடிந்தது.

# ஓதாக் கல்வி

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

வள்ளலார் வரலாற்றையும் வாக்கையும் படித்தவர்கள் 'ஓதாக் கல்வி' என்னும் செய்தியை அறிவர். ஓதாக் கல்வி என்பது என்ன?

ஓதாமலே—பயிலாமலே—ஒருவர் பேரறிவைப் பெற்றுவிட முடியுமா? முடியும் எனின், கற்றுணர்ந்த—கற்பித்த—பெரு மக்களுக்குப் பெருமை சேர்க்குமா? படிக்காமலே ஒருவர் பேரறிவு பெற்றார் என்பது அவர் தமக்குமே பெருமை சேர்க்குமா? 'படிக்காத மேதை' என்னும் புனைவும் பள்ளிப் படிப்பின்மையைக் கருதிக் கூறுவதே யன்றி, அவர்கள் படிப்பறிவே இல்லாதவர்கள், என ஒருதலையாகக் கூறுவதன்றே. தனியே எவ்வளவு படித்தனர், பட்டறிவுற்றனர்.

வள்ளலார் பாக்களிலும் உரைநடை நூல்களிலும் முடங்கல் களிலும் பொதுளி நிற்கும் முந்தையோர் நூற்குறிப்புகள் எத் துணை எத்துணை! வரலாற்றுக் குறிப்புகள் எத்துணை எத்துணை! இலக்கண இலக்கிய மேற்கோள் செய்திகள்தாம் எத்துணை எத்துணை!

திருக்குறளை, வள்ளலார்போல முழுது முழுதாகப் பொன்னே போல் போற்றிக் கொண்டவர் தமிழுலகில் அரியர்! முதல் திரு முறையிலுள்ள 'நெஞ்சறிவுறுத்தல்' ஒன்று சாலுமே!

நால்வர் நான்மணி மாலையின் தனிசிறப்பென்ன? நால்வர் வாக்குகளிலே தேக்கிய பிழிவின் வழிவாக வன்றோ பெருக் கெடுத்தது அது? சிவப்பிரகாச அடிகள், நால்வர் அருண்மொழி களைப் பயிலாமல் நால்வர் நான்மணி மாலை இயற்றியிருப்பரோ? வள்ளலார் அருளிய ஆளுடைய பிள்ளையார் அருள்மாலை, ஆளுடைய அரசுகள் அருள்மாலை, ஆளுடைய நம்பிகள் அருள் மாலை, ஆளுடைய அடிகள் அருள்மாலை ஆகியவற்றைக் கற்போர், வள்ளல் பெருமகனார் உள்ளம், அந் நால்வர் பாடல்களில் தேக் கெறியத் தெவிட்டியமையே பாவெள்ளமெனப் பெருக்கெடுத்த தென்பதை மறுக்கவும் துணிவரோ?

தாயுமானவர், பட்டினத்தார், சேக்கிழார், திருமூலர் இன் னோர் திருப்பாடல் குறிப்புகள், செய்திகள், வரலாற்றடைவுகள், திருக்கோயில் வைப்புகள், அடியார் அருள் விளக்கங்கள் இன்ன

வற்றையெல்லாம் ஓரோட்டமாய்க் கற்பாரும், செம்பொருட் பேரேட்டு நூல்களிலே வள்ளலார் தோய்விலர் எனத் துணிவரோ?

அன்பர்களுக்கு விடுத்த முடங்கல்களிலேயுள்ள மருத்துவக் குறிப்புகளைக் காண்பார், வள்ளலார் சித்தமருத்துவ நூல்களிலே நுழைபுலம் இல்லார் எனச் சொல்வரோ?

மதுரைத் திருஞானசம்பந்நர் திருமடத்தடிகளார்க்கு விடுத்த முடங்கலையும், தமிழ் என்னும் சொல்குறித்த விளக்கவுரையையும் கற்போர் வள்ளல் பெருமகனர் வளமான இலக்கணத் தேர்ச்சியில் ஐயுறவும் கொள்வரோ?

எத்துணை யாப்பு வகைகளையும் வண்ண வகைகளையும் வள்ளலார் வளப்படுத்தியுள்ளார்! எத்துணை அகத்துறைகளை வனப்புறுத்தியுள்ளார்! பிற்கால இசை வகைகளில் எத்துணை ஏற்றங் காண்பித்துள்ளார்! இவையெல்லாம் ஏடெடுத்துப் படியாமல் வந்தனவோ?

'ஏடறியேன் எழுத்தறியேன்; பாடறியேன் படிப்பறியேன்,' என்பதுபோலக் கற்றறியாத 'மெட்டு'ப் பாவலர் அவரல்லர். அவர் கற்றறிந்த கல்விச் சால்பினரே. ஆனல் அவர் கற்ற கல்வி, 'ஓதி'க் கற்ற கல்வியன்று. 'ஓதாது' கற்ற கல்வியேயாம்.

சொல்லாய்வு ஒன்றே சொற்பொருள் விளக்கத்தைத் தெள் ளிதில் காட்டவல்லது. ஓதுதல், ஓதாமை என்பவை எவை?

கடலுக்கும் கடல் அலைக்கும் 'ஓதம்' என்பது ஒரு பெயர். அப் பெயர் வந்தது எதனல்? இடைவிடாது ஒலித்துக்கொண்டிருத்த லால் 'ஓதம்' என்னும் பெயரை அவை பெற்றன. ஓதம் என்பது ஓதையாய், ஓசையாய் ஒலிப்பொருளும் தருவதாயிற்று.

இடையீடில்லாது தெய்வத் திருக்கோயிலில் பண்ணிசைத்துப் பாடுவார் எவர்? அவர் ஓதுவார் அல்லரோ? 'ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது' இறைபுகழே யன்றே! ஆகலின் அவற்றை இசைப்பார் ஓதுவார் ஆயினர். 'மறப்பினும் ஓத்துக் கொளலாகும்' என்றரே வள்ளுவர். அவ்வோத்து, ஓதப்படும் மறையேயன்றே! இவற்றை அறிய ஓதுதல் என்பது இடைவிடாது சொல்லுதல் அல்லது பயிலுதல் என்பதேயாம்! இடைவிடாது பயிலும் பயிற்சி யுடைய மற்போர் வீரர்க்குப் 'பயில்வான்' என்னும் பெயருண்மை நோக்கியும் 'ஓதுவார்' பெயர்ப் பொருளைத் தெளியலாமே!

'ஓதுவது ஒழியேல்' 'ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டா' 'நூறுநாள் ஓதி ஆறுநாள் விடத் தீரும்' என்பவை நாம் அறியா

தவையோ? 'பாடம் ஏறினும்—பாடை ஏறினும்—ஏடது கை விடேல்' என்பதும் புதுவதோ? பொது அறிவினர்க்குப் பல்கால் ஓதி ஓதி அழுந்தப் பதித்து வைத்தால்தான் பதிவாகி நிற்கும்! ஆனால் கருவிலே திருவுடையார்க்கு ஒருகால் கேட்ட—படித்த— அளவானே அழுந்தப் பதிவாகிவிடும் அவர்கள் பொதுமக்களெனப், பல்கால் வருந்திப் பயில வேண்டுவதில்லையாம். ஆகலின், அவர்கள் கற்ற கல்வி 'ஓதாக் கல்வி' என்னும் ஒரு பெருஞ் சிறப்புக்குரியதாயிற்றும்.

மாம்பழக்கவிச் சிங்க நாவலர் ஒரு பாடலை ஒருமுறை கேட்ட அளவானே ஒப்பித்ததை வரலாறு கூறுகின்றது. 'ஏடாயிரம் கோடி எழுதாது தன்மனத்து எழுதிப் படித்த விரகன்' எனத் தம் வரலாற்றை அந்தகக்கவி வீரராகவர் குறிப்பிடுகின்றார். "வெண்பா இருகாலில் கல்லானை வெள்ளோலை, கண்பார்க்கக் கையால் எழுதானைப் - பெண்பாவி, பெற்றாளே பெற்றாளே பிறர் நகைக்கப் பெற்றாளே" என்று ஔவையார் தனிப்பாடல் எள்ளி நகையாடுகிறது. இக்காலத்தும் மதுரையில் திகழும் பண்ணிசை வல்லார் திருப்பதியார் ஒரு பாடலை இருமுறை கேட்ட அளவானே அருமையாக இசையுடன் பாடுதலை நேரிடையில் ஆய்ந்து கண்டுள்ளேம்! திருக்குறள் எண்கவனர் கோயில்பட்டி இராமையனார் நினைவாற்றல் திறம் சொல்வார் சொல்லிறந்து செல்லும் தகைத்தாய் திகழ்கின்றது. இவையெல்லாம், நெஞ்சில் குத்தி உருப்போட்டு வரப் படுத்திக் கொள்வனவாய் அமைவன வல்ல! வள்ளலார் திறம், ஒருமுறை படித்தாலே—கேட்டாலே—எழுதினாலே—பச்சை மரத்தில் பதியும் ஆணியெனப்பதிந்ததாகலின் அக்கல்வி ஓதாக் கல்வி எனப் பெற்றதாம். இன்னும் தெளிவு வேண்டுமோ?

"தேன்படிக்கும் அமுதாம்உன் திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை நானறியேன்; நாவொன்றோ
ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான்படிக்கும் அனுபவங்காண் தனிக்கருணைப் பெருந்தகையே."

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து வுயிர்கலந்து வுவட்டாமல் இனிப்பதுவே."

இப் பாடல்களை நோக்குக. தம்மை மறந்து தாமே நூலாகி ஊனும், உளமும் உயிரும், உயிருக்கு உயிரும் ஒன்றியும், கலந்தும் பாடிப் பெற்ற ஒருமைப்பாட்டுக் கல்வியை அறிவோர், வள்ளலார் பெற்ற ஓதாக் கல்வியைத் தெளிவர் அல்லரோ!

———

# பாவாணரும் மகராசனும்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

பலர் புகழ் ஞாயிறு இலகொளி பரப்பி இருளகற்றுவதுபோல அறப்பெருந்தகை மகராசனும் மொழிஞாயிறு பாவாணரும் அறிவொளி பரப்பித் தமிழுலகில் தம் தனித் தன்மையை நிலை நாட்டியவர்கள். புலமிக்கவரைப் புலமை தெரிதல் புலமிக்கவர்க்கே புலனும் என்பதற்கிணங்கப் பாவாணரைக் குறித்து மனந்திறந்து பாராட்டிப் பேசுவார், மகராசனர். மகராசனரின் மாண்பை மனந்திறந்து பாராட்டி மகிழ்வார் பாவாணர். சட்டச்சொற்களைத் தமிழாக்கும்போது, சில சொற்களின் பொருளாழத்தைத் தமிழாக்கம் முழுமையாக முகந்துநிற்கிறதா என்று உறுதிப்படுத்திக் கொள்ளப் பாவாணரின் கருத்துரையை மகராசனர் கேட்டறிவார். மகராசனரின் திருக்குறள் தொடர்பான ஆங்கில நூலை வியந்து பாராட்டிச் செந்தமிழ்ச்செல்வி யிதழில் நீண்ட மதிப்புரை எழுதினர் பாவாணர்.

போலிப் புலமையாளரே, உலகில், ஒருவர்மீது ஒருவர் அழுக்காறு கொள்வர். அத்தகையவர்களைக் கருத்தில்கொண்டே தந்தைபெரியார் இரண்டு தமிழ்ப் புலவர்கள் ஓரிடத்தில் கூடினல் உடனே அங்குக் காவலர் வருகை தேவைப்படும் என்று கூறியதாகக் குறிப்பிடுவர். புலமையாழத்தின் எல்லைகண்ட சான்றோர் உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிவர் என்பதற்குச் சான்ருகவே பாவாணரும் மகராசனரும் அன்புற்று அளவளாவினர். பாவாணரை ஒருமுறை தம் துறைக்கே வரவழைத்துச் சொற்பிறப்புத் தொடர்பாக உரையாற்றச்செய்து கேட்டு மகிழ்ந்தார் மகராசனர். மேலையாரிய மொழியில் அடிப்படைச்சொற்கள் பெரும்பாலானவை தமிழ் வேரிலிருந்து பிறந்தவை என்பதற்கான ஆணித்தரமான சான்றுகளைப் பாவாணர் அள்ளியள்ளி வீசுதலைக் கண்ட மகராசனர், நடுவர் மகராசனராகவே, ஒருபாற் கோடாது அவைத்தலைமையேற்றுப் பாவாணர் கொள்கையை முழுமையாக ஒப்பியுவந்து மேலும் பல சான்றுகளை முடிவுரையில் எடுத்துக் காட்டி அவையோரை மகிழ்வித்தார். சட்டத்துறைக்கு ஒப்பற்ற தொண்டாற்றியதோடு மட்டிலாக் காதலால் கம்பன் படைப்பை, கன்னித்தமிழ்ச் செல்வத்தை, முன்னைத் தமிழ்ப் புலவோர் மூதறிவுப் பெட்டகத்தை, உள்ளங்குளிர உரைக்கோவையாக்கி, அல்லும் பகலும் அன்பர்க்கும் நண்பர்க்கும் இலக்கிய விருந்தளித்த

மகராசனும், சொற்பிறப்புக் கடலின் கரையும் ஆழமும் கண்டு ஞாலமுதன்மொழிக் கொள்கையை உலகிற்களித்து, உயர்தனிச் செம்மொழியாம் செந்தமிழ்ப் பெருமையை உயர்த்திக் காட்டி, நந் தமிழர் உளங்குளிர்வித்த பாவாணரும் வாராச் சேட்புலம் படர்த் தாலும் வளர் தமிழிலக்கியப் பூங்காவில் எண்ணங்கவரும் வண்ண மலர்களாகப் பொலிந்து நிற்கின்றனர். வாழ்க அவர் தொண்டு. வளர்க அவர் நோக்கம்.

---

## காவிரி நீர்—தமிழ்நாட்டின் வழிவழி உரிமை! வரலாறு தரும் வியத்தகு செய்திகள்!

கி. பி. 12ஆம் நூற்றுண்டிலும், 17ஆம் நூற்றுண்டிலும் காவிரி நீர் தமிழ்நாட்டுக்கு வராமல் தடுத்து நிறுத்தப்பட்டது. அப்போதைய தமிழ்நாட்டு அரசுகள் படையெடுத்துக் காவிரிநீரைத் தமிழ்நாட்டுக்குக் கொண்டுவந்தன. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழக வரலாற்று ஆய்வில் இந்நிகழ்ச்சிகள் தெரியவந்தன.

கி. பி. 1146 முதல் 1163 வரை சோழநாட்டை ஆட்சி செய்தவன் இரண்டாம் இராசராசன். அப்போது மைசூர்ப் பகுதியை ஆண்டு வந்தவன் போசள மன்னன் முதலாம் நரசிம்மன்.

போசள நரசிம்மன் காவிரியின் நடுவே செயற்கை மலைகளை ஏற் படுத்திக் காவிரியின் போக்கை மாற்றினான். அதனால் தமிழ்நாட்டுக்கு வரவேண்டிய காவிரிநீர் தடைப்பட்டுச் சோழநாட்டில் கடும் வறட்சி ஏற்பட்டது. காவிரிக் கால்வாய்கள் தூர்ந்துபோயின.

இரண்டாம் இராசராசன் படையெடுத்துப் போசள நரசிம்மன் கட்டிய செயற்கை மலைகளை உடைத்துக் காவிரி நீரைத் தமிழகம் கொண்டுவந்தான். சோழநாட்டின் பல பகுதிகளில் "புதுக் காவிரிகள்" வெட்டப்பட்டன. படை நடத்திய செலவுக்காகக் "காவிரிக்கரை வினியோகம்" என்ற வரியும் விதிக்கப்பட்டது.

இந்நிகழ்ச்சியைத் தக்கயாகப் பரணி, இராசராசன் உலா, தொல் காப்பிய உரை மேற்கோள் பாடல் ஆகியனவும் உறுதிப்படுத்து கின்றன.

### கி. பி. 17ஆம் நூற்றுண்டில்!

காவிரிக்கு நீர் வராத நிலை கி. பி. 17ஆம் நூற்றுண்டிலும் மைசூர் மன்னன் சிக்கதேவராசன் காலத்தில் ஏற்பட்டது, புது அணைகளால்.

தமிழ்நாட்டை அப்போது ஆட்சிபுரிந்த மதுரை நாய்க்கமரபு இராணி மங்கம்மாளும், தஞ்சை மராத்திய மன்னன் சகசியும் தங்களுக்குள் எவ்வளவோ கருத்து வேறுபாடுகள் இருப்பினும் மைசூருக்குத் தங்கள் கூட்டுப்படையை அனுப்பினர். ஆனால் வலிமை யற்ற மைசூர் அணைகள் தமிழ்ப்படைகள் போகும்முன் உடைந்தன. காவிரி நீர் தமிழகம் வந்தது. இவ் வரலாற்று நிகழ்ச்சிகள் தமிழர்தம் காவிரி உரிமையை உறுதிப்படுத்துகின்றன.

—தமிழ்ப் பல்கலைக் கழகச் செய்தி வெளியீடு, தஞ்சை.

# கோச்செங்கணன் யார்?

[டாக்டர் இரா. கலைக்கோவன் M.B.B.S., D.O.]

முற்காலச் சோழப் பெருவேந்தர்களுள் குறிப்பிடத்தக்க சிலருள் முதன்மையானவன் சோழன் கோச்செங்கணன். இப் பெருமகனைப்பற்றிப் பல வரலாற்றுக் குறிப்புகள் வழங்கப்பட்டு வருகின்றன. சில வரலாற்று ஆய்வாளர்கள் இப் பெருமகனைச் சங்ககாலச் சோழப் பேரரசர்களுள் ஒருவனாகக் கொள்கின்றனர்.[1] வேறு ஆய்வாளர் சிலர் நீண்ட நெடும் ஆய்வுக்குப் பிறகு கோச் செங்கணன் தமிழகத்தின் இருண்ட காலத்தில் வாழ்ந்த (கி. பி. 300—600) மன்னர்களுள் ஒருவன் என்று வரையறுக்கின்றனர்.[2] கோச்செங்கட் சோழனைக் கணைக்கால் இரும்பொறையுடன் தொடர்பு படுத்திக் கூறுவது போலவே, சேரமான் கோக்கோதை மார்பனுடன் தொடர்புபடுத்திப் பேசுவாரும் உளர். அப் பெரு மானைச் சைவத்தில் தழைத்த நாயன்மார்களுள் ஒருவனாய்க் கொண்டாடிவரும் அதே நேரத்தில், அவனைத் திருமால் அடிய வனாய்ச் சிறப்புப் பெற்றவன் என்று கூறுவாரும் உளர்.[3] அவன் எடுப்பித்த எழுபது மாடக்கோயில்களும் சிவபெருமானுக்கா, திருமாலுக்கா, அல்லது இருவருக்குமா என்பதிலும் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன.[4] இவற்றையெல்லாம் வரலாற்று இலக்கிய ஆதாரங்களைக் கொண்டு தெள்ளத் தெளிய நடுவு நிலையில் நின்று ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.

கோச்செங்கட் சோழனைப்பற்றிய குறிப்புகளைப் புறநானூறு, களவழி நாற்பது, சம்பந்தர், அப்பர், சுந்தரர் தேவாரப் பதிகங்கள், பெரிய திருமொழி, திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, பெரிய புராணம், திருவானைக்கா புராணம், கலிங் கத்துப் பரணி, மூவருலா போன்ற இலக்கியங்களில் காணலாம். அன்பில் செப்பேடுகளில் செங்கணன்பற்றிய குறிப்புகள் காணப் படுகின்றன.[5] இது தவிர திருவாலங்காட்டுச் செப்பேடுகளும்

---

1. பிற்காலச் சோழர் வரலாறு—தி. வை. சதாசிவ பண்டாரத் தார், பக். 4.
2. சோழர் வரலாறு—டாக்டர் மா. இராசமாணிக்கனார், பக். 13. ஆழ்வார்கள் காலநிலை—மு. இராகவையங்கார், பக். 40.
3. ,, ,, ,, , பக். 127.
4. பல்லவர் சரித்திரம்—பி. தி. சீனிவாச அய்யங்கார், பக். 114.
5 Epi. India Vol. 15, Verse 13, p. 70. (Anbil Plates of Sundara Chola).

கன்னியாகுமரிக் கல்வெட்டுகளும் செங்கணனைக் கரிகாலன் வழித்தோன்றலாகவும், ஒன்பதாம் நூற்றாண்டினனான விசயாலயச் சோழனுக்கு முன்னோனாகவும் இடையில் வைத்துக் கூறுகின்றன.[6]

இலக்கியச் சான்றுகள், கல்வெட்டுச் சான்றுகள் இவற்றை வைத்து நோக்கும்போது கோச்செங்கணன் கி. பி. ஆறும் நூற்றாண்டிற்கு முற்பட்டவன் என்பது உறுதியாகின்றது. ஆய்வாளர்களுக்குள் இதில் கருத்து மாறுபாடு இல்லை. அவன் சங்க காலத்தில் வாழ்ந்தவனா அல்லது சங்க காலத்திற்குப் பிறகு வாழ்ந்தவனா என்பதே ஆய்வுக்குரிய செய்தியாகும். கோச்செங்கட்சோழன் சங்க காலத்தில் வாழ்ந்தவன் என்று ஆய்வுரை செய்யும் பெருமக்கள் அதற்காக எடுத்துக்கொள்ளும் காட்டுகள் புறநானூற்றுப் பாடலின் அடிக்குறிப்பும்,[7] களவழி நாற்பது ஏட்டின் உரைகாரர் எழுதிய பின்குறிப்புமேயாகும்.[8] இவற்றைத் தெளிவாகக் காண்போம்.

''குழவி இறப்பினும் ஊன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளில் தப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணும் அளவை
ஈன்ம ரோஇவ் வுலகத் தானே''[9]

இப் புறப்பாடலின் அடிக்குறிப்பில் 'சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணானோடு திருப்போர்ப்புறத்துப் பொருது, பற்றுக்கோட்பட்டுக், குடவாயிற் கோட்டத்துச் சிறையில் கிடந்து, தண்ணீர் தாவென்று பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக்கொண்டிருந்து, உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு' என்று காணப்படுகிறது. இந்த அடிக்குறிப்பு, இப் பாடலைப் பாடிய, புலவர் எழுதியதன்று என்பது, 'உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு' என்பதால் அறியப்படும். புறநானூற்றுப் பாடல்களின் கீழ் உள்ள அடிக்குறிப்புகள் பல பிற்

6. ஆழ்வார்கள் காலநிலை—மு. இராகவையங்கார், பக். 40.

7. புறநானூறு—உ. வே. சாமிநாதய்யர் உரை, பக். 184; பாடல் - 74.

8. களவழி நாற்பது—கழகப் பதிப்பு, பக். 4.

9. புறநானூறு—செய்யுள் 74.

காலத்தில் எழுதப்பட்டவையாகும். அவை பல இடங்களில் பொருத்தமற்று விளங்குவது கண்கூடு. புறம். 389ஆம் செய்யுளில்,

> "ஆத னுங்கன் போல நீயும்
> பசித்த வொக்கற் பழங்கண் வீட
> வீறுசால் நன்கல நல்குமதி பெரும"

என வரும் தொடர்களைக் கண்டதும், 'ஆதனுங்கனைக் கள்ளி லாத்திரையனார் பாடிய பாட்டு' என்று அடிக்குறிப்பு தரப்பட்டுள்ளது.[10] இங்கு 'ஆதனுங்கன் போல நீயும்' என வரும் தொடரே, ஆதனுங்கன் உவமைக்காக மேற்கொள்ளப்பட்ட பெயர் என்பதை விளக்குகிறது. இவ் விளக்கத்தைக் கொள்ளாமல் இது ஆதனுங்கனைப் பாடிய பாட்டு எனப் பிழையான அடிக்குறிப்பு செய்திருப்பது போலவே, பிழைபட்ட இடங்களும் பொருத்தமற்ற அடிக்குறிப்புகளும் பலவாகும். இத்தகைய அடிக்குறிப்புகளில் ஒன்றாகவே செங்கணானைக் குறிக்கும் அடிக்குறிப்பையும் கொள்ளலாம்.[11]

மேலும் பேராசிரியர் அவ்வை சு. துரைசாமி அவர்களால் உரையெழுதப்பெற்று, கழகத்தால் வெளியிடப்பட்ட புறநானூற்றுப் பதிப்பில் இப் பாடலின் அடிக்குறிப்பு மாறிக் காணப்படுவது இங்குக் குறிப்பிடத் தகுந்தது. 'இது நல்லேர் முதியனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடியது' என்று அடிக்குறிப்பு மாறியுள்ளது. இப் பதிப்பின் முன்னுரையில் அவ்வை சு. துரைசாமி அவர்கள், உ. வே. சா. அவர்களின் பதிப்புக்கும் தம் பதிப்புக்கும் உள்ள மாறுபாடுகளை விளக்குகையில் தமக்குக் கிடைத்த ஓலைச் சுவடியிலிருந்து இம் மாற்றங்களைச் செய்ததாகக் குறிக்கிறார்கள்.[12] இப்படிப் பதிப்புக்குப் பதிப்பு மாறும் அடிக்குறிப்புகளைக் கொண்டு ஒரு மாமன்னனின் காலத்தை நிறுவுவது அறிவுடைமையாகாது.

களவழி நாற்பது நூலின் இறுதியில் அதன் பழைய உரையாசிரியர், 'சோழன் கோச்செங்கணானும் சேரமான் கணைக்கால் இரும்பொறையும் போர்ப்புறத்துப் பொருதுடைந்துழிச் சேரமான் கணைக்கால் இரும்பொறையைப் பற்றிக்கொண்டு, சோழன்

---

10. புறநானூறு—உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு, பக். 582.

11. சோழர் வரலாறு - டாக்டர் மா. இராசமாணிக்கனார், பக். 8.

12. புறநானூறு II—அவ்வை சு. துரைசாமி உரை, கழகப் பதிப்பு, பக். 6.

செங்கணுன் சிறை வைத்துழிப், பொய்கையார் களம்பாடி வீடு கொண்ட களவழி நாற்பது முற்றிற்று' என்று குறிப்பிடுகிருர்.[13]

தமிழ் நாவலர் சரிதையில், கணைக்கால் இரும்பொறையால் பாடப்பட்டதாகக் கூறப்படும் புறநானூற்றின் 74ஆம் பாடல், 'இது சேரமான் கணைக்கால் இரும்பொறை, செங்கணுனல் குணவாயில் கோட்டத்துத் தளைப்பட்டபோது, பொய்கையாருக்கு எழுதி விடுத்த பாட்டு' என்ற அடிக்குறிப்புடன் காணப்படுகிறது.[14] இது குறித்து டாக்டர் மா. இராசமாணிக்கனுரவர்களும், நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களும், தங்கள் நூல்களில் விரிவாகவே குறிப்பிடுகின்றுர்கள்.[15]

புறநானூற்றின் அடிக்குறிப்பு, 'கணைக்கால் இரும்பொறை சிறையில் இறந்தான்' என்று குறிப்பிடுகின்றது. தமிழ் நாவலர் சரிதையில் அச் செய்யுளின் அடியில், 'இது கேட்டுப் பொய்கையார் 'களவழி நாற்பது' பாடச் செங்கணுன் சிறைவிட்டு அரசளித்தான்'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[16]

ஒட்டக்கூத்தர் தாம் பாடிய மூன்று உலாக்களிலும் இச் செய்தியைக் குறிப்பிடுகிருர்.

''மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திவனும்''[17]

''......பொறையனைப் பொய்கைக்குப் பண்டு
கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்''[18]

''நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்லவன் கால்தளையை விட்டகோன்''[19]

---

13. களவழி நாற்பது—கழகப்பதிப்பு, முகவுரை, பக். 4.

14. தமிழ் நாவலர் சரிதை—கழகப்பதிப்பு, பக். 130.

15. சோழர் வரலாறு—டாக்டர் மா. இராசமாணிக்கனுர், பக். 9. களவழி நாற்பது—கழகப் பதிப்பு, முகவுரை, பக். 5.

16. தமிழ் நாவலர் சரிதை—கழகப் பதிப்பு, பக். 130.

17. விக்கிரம சோழன் உலா—கழகப்பதிப்பு, பக். 28. வரி 27, 28.

18. குலோத்துங்க சோழன் உலா—கழகப்பதிப்பு, பக். 28, வரி 39, 40.

19. இராசராச சோழன் உலா—கழகப்பதிப்பு, பக். 2, வரி. 35, 36.

இதையே சயங்கொண்டாரும் கலிங்கத்துப் பரணியில் இராச பாரம்பரியத்தில்,

"களவழிக் கவிதை பொய்கையுரை செய்யஉதியன்
கால்வழித் தளையை வெட்டியர சிட்டவனும்"

என்று குறிப்பிடுகிருர்.

இவ் விலக்கியச் சான்றுகள் ஒன்றுக்கொன்று முரண்பட்ட நிலையில் பல கருத்துகளைத் தெரிவிக்கின்றன. சேரன் சோழனின் சிறையில் இறந்தான் என்று புறநானூற்று அடிக்குறிப்பும், சேரன் பொய்கையாருக்கு எழுதிவிடுத்த இப் பாட்டு கேட்டுப் பொய்கையார் களவழி பாட, செங்கணான் சேரனைச் சிறைவிட்டு அரசளித்தான் என்று தமிழ் நாவலர் சரிதையும், சோழன் சேரனைப் பொய்கையார் பாடலுக்கு விடுதலை செய்தான் என்று ஏனைய இலக்கியச் சான்றுகளும் குறிப்பிடுகின்றன. இவற்றில் எது நிகழ்ந்திருக்கக் கூடும் என்று தெளிவு காண வேண்டும்.

(தொடரும்)

---

## தமிழைக் காப்போம்!

[கடவூர். மணிமாறன், க. மு., கிருட்டிணராயபுரம்.]

இருள்கவிந்த காலத்தில் மாந்தர் கூட்டம்
இதழ்விரிக்கக் கல்லாத ஊமை நாளில்
திருவிளக்காய் ஒளிச்சுடராய் அறிவுக் கண்ணைத்
திறந்துவிட்ட தீந்தமிழை நெஞ்சில் ஏந்தி
வருதுயரை வீழ்த்திடுவோம்! வளமே பொங்கும்
வரலாற்றை உருவாக்கி அற்றை நாளின்
பெருமையினைப் புதுப்பிப்போம்! உரிமை மீட்போம்
பேசுகின்ற செந்தமிழை வளர்க்க வாழ்வோம்.

கடலாண்ட காவலர்கள் நந்தம் முன்னோர்
கயற்புலிவில் முக்கொடியை நினைவு கூர்வோம்
உடலுயிரும் உறுபொருளும் வாழ்வும் நம்மோர்
உயிர்மூச்சும் தமிழன்றோ! புறங்காட் டாமல்
அடலேறாய்ப் புலிப்போத்தாய்த் திகழ்ந்த வாழ்வும்
அனற்பட்ட மெழுகாகிக் கரைந்த தேனோ?
இடர்சூழ்ந்தே எதிர்வரினும் எழுச்சி கொண்டே
எதிர் நீச்சல் போட்டிடுவோம்! தமிழைக் காப்போம்!

# கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியனர் மணிவிழா

## 2—11—1982



கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியனரும்
அவர்தம் துணைவியார் அலர்மேலு அம்மையாரும்

# மறைமலையடிகளார் நூலகத்தில்
# மாண்புமிகு அமைச்சர்
# ஆர். வி. சுவாமிநாதன்



நடுவணரசு வேளாமைத்துறை அமைச்சர்
மாண்புமிகு ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள்
23—10—'82-ல் நூலகத்திற்கு வருகை தந்தபோது
எடுத்த படம்.
கழக ஆட்சியரும், நூலகர் இரா. முத்துக்குமாரசாமியும்
அமைச்சருடன் காணப்படுகின்றனர்.

# கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் மணிவிழா

கலைமாமணி டாக்டர் புத்தனேரி சுப்பிரமணியனர் அவர்களின் மணிவிழா 2—11—82 அன்று மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில் மிகச் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. அன்று மாலை 4-30 மணியளவில் இன்னிசையோடு விழாத் துவங்கிற்று. செட்டி நாட்டரசர் டாக்டர் அ. முத்தையா செட்டியார் வரவேற்புரையும் வாழ்த்துரையும் வழங்கினர். மாண்புமிகு நிதியமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் விழாவினைத் தொடங்கி வைத்து உரையாற்றினர். மாண்புமிகு சட்ட மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் விழாத் தலைமையேற்று அரிய உரையாற்றினர். கவிஞரின் படைப்புகளைப் பாராட்டி டாக்டர் த. வே. வீராமசாமி, டாக்டர் ஏ. என். பெருமாள், கழகப் பொதுமேலாளர் இரா. முத்துக்குமார சாமி, கவிஞர் பொன்னடியான், நடிகமணி டி. வி. நாராயணசாமி ஆகியோர் கருத்துரையாற்றினர். இவ் விழாவின் தொடர்பாகக் கவிஞரவர்கள் எழுதிய 'வள்ளல் எழுவர்,' 'சிவகாமியின் சபதம்' என்னும் நாடகக்காப்பியம், மணிவிழா மலர் ஆகியவற்றை மாண்புமிகு அமைச்சர் வீரப்பன் அவர்கள் வெளியிட்டனர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்கள் பாராட்டுரை வழங்கினர். மன்றங்கள் பல பாராட்டுரை வழங்கின. கவிஞர் ஏற்புரைக்குப் பின், திரு. டி. கே. எஸ். கலைவாணன் அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிந்தது. கவிஞர் அவர்கட்கு எம்முடைய உளமார்த்த வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

---

## கழகத் தொடர்பு நிறைந்த கவிஞர்

[கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை]

புத்தனேரி ரா. சுப்பிரமணியம் கழகத்தோடு நீண்ட காலத் தொடர்பு உடையவர். திருநெல்வேலியில் கழக அமைச்சராம் என் அருமைத் தமையனார்வர்கள் 21—5—41 முதல் 27—5—41 முடிய மெய்கண்ட சாத்திர மாநாட்டை மிகவும் சிறப்பாக நடத்தினர்கள். அம் மாநாட்டிலே திரு புத்தனேரி ரா. சுப்பிரமணியமும் அவர் தம்பியாரும் விழாத் தொண்டர்களாக நன்கு பணி

புரிந்தனர். அவ்விருவரும் விழாப் படத்தில் கீழே அமர்ந்திருக்கின்றனர். யானும் பக்கத்தில் அமர்ந்திருக்கின்றேன்.

அவர் பள்ளியிறுதித் தேர்வில் வெற்றி பெற்றதும் சென்னையில் கழகத்தில்—செந்தமிழ்ச் செல்வியில்—எழுத்துப் பணி யேற்றனர். பின்னர் அரசுப் பணி புரியும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. மேட்டூரில் பொதுப்பணித் துறையில் உதவியாளராகப் பணி புரிந்தார். அவர் சென்று வேலை பார்த்த இடங்களிலெல்லாம் அவருக்கு நல்ல பெயர். சென்னைக்கு மாற்றப்பெற்றபின் நடிகர் ஔவை தி. க. சண்முகம் அவர்களும் தி. க. பகவதி அவர்களும் இவருக்கு நண்பர்களாயினர். கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியத்தின் கவி பாடும் திறமை அவர்கள் நடிப்புக்குப் பெருந்துணை புரிந்தது. அவர்கள் வெளியூர்கட்கும் வெளிநாடுகட்கும் சென்றபோது புத்தனேரிக் கவிஞரும் உடன் செல்வர்.

கவிபாடுந் திறமையுடைய இவர் மக்களிடம் சிரித்த முகத்தோடு இனிமையாகப் பழகுவார். கவி பாடுந் திறன் நாளுக்கு நாள் சிறப்புற்று இசைவல்லுநர்களும் தமிழிசைச் சங்கமும் மதிக்கத்தக்க அளவுக்கு வளர்ந்தது.

கழகம் நடத்தும் பெருவிழாக்களிலெல்லாம் தொடக்கத்தில் வரவேற்பு நிகழ்ச்சி முதல் இறுதிவரை இருந்து சிறப்பு மிக்க பணி புரிவார். இவர் பல்துறைப் பெருமக்கள் பாராட்டினைப் பெற்றுப் புகழ்பட வாழ்கின்றனர்.

இவர் மணிவிழா மிகவும் சிறப்பாக நடைபெற எல்லாம்வல்ல ஆடல் வல்லான் திருவருளை வேண்டுகிறேன்.

—மணிவிழா மலர்.

———

## குழந்தைக் கவிஞர்
## அழ. வள்ளியப்பா அவர்களின் மணிவிழா

*குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் மணிவிழா 4—11—1982-ல் புதுக்கோட்டை மாவட்டம், பிள்ளையார் பட்டியில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. கவிஞரவர்கள் மேலும் பல்லாண்டுகள் நலமுடன் வாழ்ந்து தமிழ்த்தொண்டு புரிய எல்லாம் வல்ல அம்மை அம்பலவாணன் அருள் புரிவானாக.*

**—ஆசிரியர்.**

# மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு

# அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன் வருகை

நடுவண் அரசின் உணவுத்துறை அமைச்சர் மாண்புமிகு ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் 23—10—82 அன்று மாலை மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு வருகை தந்தார். அந் நூலகத்தை நடத்திவரும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பழைய பங்குதாரரான அமைச்சர் அவர்கள் மறைமலையடிகள் நூல்நிலையத்தின் அமைப்பையும் அதன்கண் அடங்கியுள்ள பல்லாயிரக்கணக்கான அரிய நூல்களையும் கண்டு வியந்து பாராட்டியதோடு நூலக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்களையும் பாராட்டினார். மறைமலையடிகள் தொகுத்த அரிய ஆங்கில நூல்களையும் ஒவ்வொரு பக்கத்திலும் அடிக்கோடிட்டும், பக்கக்கோடிட்டும் அவர் நூல்படித்த பான்மையையும் கண்டு அவர் மகிழ்ந்தார். ஏறத்தாழ ஒருமணி நேரம் கழக ஆட்சியாளருடனும், நூலகர் இரா. முத்துக்குமாரசாமி அவர்களுடனும் நூலகம் முழுவதையும் அமைச்சர் கண்டு பாராட்டினார். பின்னர், நூலகத்தைப்பற்றிய தமது கருத்துரையினைப் பதிவேட்டில் எழுதினார். அக் கருத்துரை வருமாறு :

ஸ்ரீலஸ்ரீ மறைமலை அடிகளார் நூலகத்திற்கு வந்து பார்க்கும் பேற்றினைப் பெற்றேன். 1937ஆம் ஆண்டு தமிழ் விழாவில் கலந்துகொள்ள அடிகளார் எனது சொந்த கிராமமாகிய பாகனேரிக்கு வருகைதந்தபோது அவர்களுடன் நெருங்கிப்பழகும் வாய்ப்புப் பெற்றேன். மேலும் என் இல்லத்திற்கு மறைமலை அடிகளார் நல் வரவளித்துப் பகல் உணவு அருந்தியது என் பெரும் பாக்கியங்களில் ஒன்றுகும். அடிகளார் ஞாபகார்த்தமாக நடைபெறும் இந்த நூலகத்தில் மிக அபூர்வ நூல்கள் இருப்பதைக் கண்டு மிகவும் ஆனந்தம் அடைந்தேன். இந்த நூலகம் சிறப்புடன் பல்லாண்டு பல்லாண்டுகளாக நடைபெற எல்லாம் வல்ல ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றேன்.

(ஓம்) ஆர். வி. சுவாமிநாதன்
இந்திய விவசாய அமைச்சர்,
14. அக்பர் ரோடு, புது டெல்லி.
23—10—1982.

## ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப்பிள்ளை
மகாகவி பாரதி நகர், சென்னை-600 039.]

### 11. CABINET MAKER

பேருந்து நண்பர் ஒருவர் இரண்டு வினாக்களைத் தொடுத்தார். Furniture என்னும் சொல்லுக்குத் தமிழ் என்ன என்பது முதல் வினாவாகும். இரண்டாவது வினா Cabinet Maker! பின்னைய வினாவினை எழுப்பிய பின்னர், நண்பர் குறுநகை பூத்தார்! அந்தக் குறுநகையிலே குறும்பும் வெளிப்பட்டது!

நீண்ட நாள்களாகத் தொல்லை கொடுத்து, இப்போது நல்லதொரு பெயரை ஏற்று நிற்பது Furniture என்னும் சொல்லாகும். அதனைச் சரிவர மொழிபெயர்க்க இயலாது என்று பலர் அறைகூவல் விடுத்து வந்தனர்! விவரம் தெரியாத சிலர் இன்றுங்கூட ஏளனமாகப் பேசுவதைப் பார்க்கலாம்!

தொடக்கத்தில் செய்யப்பெற்ற மொழிபெயர்ப்புகள் நன்கு அமையவில்லை என்பது உண்மைதான். "தட்டுமுட்டுப் பொருள்கள்", "மரச்சாமான்கள்", "மேசை நாற்காலி போன்ற பொருள்கள்", "வீட்டுத் தளவாடங்கள்" என்றெல்லாம் சொல்லிப் பார்த்துக் கையைப் பிசைந்துகொண்டு நின்ற நிலை இருக்கத்தான் செய்தது! ஆனால் இன்றோ "அறைகலன்" என்னும் அருமையான மொழிபெயர்ப்பு கிடைத்துவிட்டது!

அறைகூவல் விடுத்தோர்க்கெல்லாம் "அறைகலன்" வீரவிடை அளித்து, வெற்றிநடை போட்டு வருகின்றது!

மேசை, நாற்காலி முதலானவை இன்று மரத்தினால் மட்டும் செய்யப்பெறுபவை அல்ல! மரம் அல்லாத எஃகு போன்ற எத்தனையோ வேறுவகையான பொருள்களாலுங்கூட செய்யப் பெறுகின்றன. அவை அனைத்திற்கும் பொருந்துகின்ற அழகிய பெயர்தான் "அறைகலன்".

"அறைகலன்" தெரிந்துவிட்ட பிறகு "அறைகலன் செய்பவர்" Furniture maker ஆகிவிடுகிறார். அவருடன் தொடர்புடைய, அவரைவிடச் சற்று உயர்ந்த இன்னொருவரைப்பற்றித் தான் நாம் இப்போது ஆராய்ந்து வருகின்றோம். அவர்தாம் Cabinet Maker!

''அறைகலன் செய்பவர்'' என்னும் பெயரில் உள்ள ''அறை'' என்னும் சொல்லை நீக்கிவிட்டுப் பார்த்தால், ''கலன் செய்பவர்'' தோன்றுகிறார்! இந்தப் பெயரை நம் இலக்கியத்தில் எங்கோ கேட்டிருக்கின்றோமே! நினைவிற்குக் கொண்டுவர முயற்சி செய்வோம்.

உருக்கமான ஒரு சிறு கதையை உயிரோட்டத்துடன் தீட்டியுள்ளது நம் பழந்தமிழ்ப் பனுவல் புறநானூறு.

இருந்த ஊரை விட்டு இரண்டு அன்பு உள்ளங்கள் வேற்றூருக்குப் பயணமாயின. ஆம், தலைவன் சென்ற வழியே தலைவியும் சென்றாள்! வண்டிச் சக்கரத்தின் ஆரத்தில் அமர்ந்த பல்லியைப் போன்று, தலைவனைவிட்டு நீங்காமல் ஒட்டிச் செல்கின்றாள் தலைவி! செல்லும் பாட்டையில் எதிரிப்படைகள் எதிர்ப்படுகின்றன. வீரத்தின் திருவுருவான தலைமகன் பகைநாட்டுப் படையுடன் தன்னந்தனியாகப் போர் புரிந்து இன்னுயிரை இழக்கின்றான். வீரத்தில் சற்றும் சளைக்காத அந்தப் பெண்மணி, அவன் உடலத்தைச் சுமந்துகொண்டு அருகேயுள்ள ஊருக்கு ஓடுகின்றாள். அங்கிருந்த கலம் செய்யும் கலைஞனைக் கண்டு, ஒரு வேண்டுகோள் விடுக்கின்றாள். ''இரண்டு பேர்களை ஒருசேரக் கவிக்கக்கூடிய ஈமத்தாழியை இயற்றித் தருவாயாக'' என்பதே அந்த வேண்டுகோள்! இந்தக் காட்சியை எழிலுறப் படம் பிடிக்கும் பாட்டினைப் படித்துப் பார்ப்போம்.

''கலம்செய் கோவே கலம்செய் கோவே
அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் தன்னொடு
சுரம்பல வந்த எமக்கும் அருளி
வியன்மலர் அகன்பொழில் ஈமத் தாழி
அகலி தாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே.''

கலம் செய்பவரை விளிக்கும் பாங்கு கவின்பெற்றுத் திகழ்கின்றது. ஈண்டுக் குறிக்கப் பெறுபவர், வழக்கமான கலங்களைச் செய்பவர் அன்று. இவர் கலையில் வல்லவர், கலம் செய்யும் கோ, கலம் செய்யும் கோவேந்தன் ஆவார்.

Cabinet என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் இருப்பினும், நமக்குத் தேவையான பொருள் ''பெட்டி'' என்பதாகும். விலையுயர்ந்த பொருள்களைச் சேமித்து வைக்க உதவுகின்ற வேலைப்பாடுடைய பெட்டியாகும் இது. Cabiuet maker என்னும் தொடருக்கான ஆங்கில விளக்கம் a maker of Cabi-

nets and other fine furniture என்பதாகும். உயர்ந்தவகை அறைகலன்களைச் செய்பவர் Cabinet maker ஆவார். எனவே அவருடைய பெயரைச் "சிறப்பறைகலன் செய்பவர்" என்று அமைத்துவிடலாமே!

வேலைப்பாடுடைய பெட்டிகள், நாற்காலிகள், சார்மணைகள் போன்ற பொருள்களைச் செய்பவர் Cabinet maker அல்லவா? ஆகவே அவருக்குக் "கலை நுட்பம்" என்பது இன்றியமையாது தேவைப்படும் திறமையாகும். "கலம் செய் கோவை" இப்போது எண்ணிப் பார்த்தால், முழுப்பொருள் விளங்கிவிடும்! அவர்தாம் இந்நாளைய Cabinet maker!

அறைகலன் செய்பவரை Furniture maker என்று கண்டோம். கலைநயத்தோடு அறைகலன் செய்பவரை Cabinet maker என்று கண்டோம். "கலை அறைகலன் செய்பவர்" அல்லது "கலைக்கலன் செய்பவர்" என்று அவரை அழைக்கலாமன்றோ?

முடியுந்தறுவாயில் ஒரு சிறிய சிக்கல்! ஏதேனும் work of art செய்பவரும் "கலைக்கலன் செய்பவர்" ஆகாரோ என்னும் வினா எழக்கூடும். அதற்குரிய விடை இதுதான். கலைப்பொருள்கள் செய்பவர்கள் makers of works of art ஆவார்கள். ஆனால் கலைக்கலன் செய்பவர்கள் makers of artistic forms of furniture என்றுவர்.

———

தமிழ்க் கலைச்செல்வர் கோ. முத்துப் பிள்ளை அவர்கள் உதிர்த்த முதிர்ந்து வந்த முத்துக்களைக் கீழே காணலாம்:

Furniture Maker = அறைகலன் செய்பவர்.

Cabinet Maker = கலைக்கலன் செய்பவர்.

———

## சமுதாயமும் நம்பிக்கையும்

மறுமைபற்றிய அச்சமும் அவாவும் குறைந்து வருவதுபோலவே, இம்மைபற்றிய அச்சமும் அவாவும் குறையத் தொடங்கிவிட்டன. நல்லவர்க்கு உதவி செய்யவேண்டிய சமுதாயம், அவர்கள் துன்புற்று வாடுவதையும் பொறுமையோடு பார்த்து வருகிறது. தீயவரை விலக்கவேண்டிய சமுதாயம், அவர்கள் தடை இல்லாமல் இன்பம் தேடி வாழ்வதையும் பார்த்து வருகிறது. ஆகையால் இம்மைப் பயன்களைப்பற்றியும், போதிய நம்பிக்கை இல்லாமல் குறைந்து வருகிறது.

—டாக்டர் மு. வரதராசனர்.

# பாண்டித்துரைத் தேவர் பாடிய
# காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(முன்னிதழ், ௬௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்குக் கார் வரவு என்ருலே தலைவலிதான். அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையொடு மன்னர் வருவது போன்ற ஆரவாரத்துடன் கார் வருகின்றது. அக் கார்கால மாலைப்போது தலைவிக்குப் போதுமென்ருகி விடுகிறது.

''நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை''

(முல்லைப் பாட்டு. வரிகள் 1-6)

(நனந்தலை - பரந்த; நேமி - 'சுதரிசனம்' ஆகிய சக்கரப் படை; வலம்புரி - வலம்புரிச் சங்கு, பாஞ்சசந்நியம் ;மா அல்- திருமால்; கோடு - மலை; எழிலி - மேகம்)

மாவலி நீர் பெய்த அளவிலே சங்கு, சக்கரத்துடன் உயர்ந்த திருமாலைப் போல முழங்கும் கடலின் நீரை உண்டு, எழுந்து மலைகளை வளைத்துக், கடுகியே விரையும் மேகம் பெரு மழையைப் பெய்த குறுகிய மாலைக் காலத்திலே தோழியர் தலைவியை நோக்கி "இன்னே வருகுவர் தாயர் என்ற ஆய்மகள் நன்மொழி கேட்டனம்; எனவே வருத்தம் நீங்குக'' என்றுரைத்தார்.

''வருதல் தலைவர் வாய்வது நீநின்
பருவரல் எவ்வம் களைமா யோய்''.

(மு. பா. 20-21)

(தலைவர் வருதல், வாய்வது—உறுதி; பருவரல் எவ்வம் - மன வருத்தம்; களை - நீக்கிவிடு; மாயோய் - மாமை நிறத்தை யுடையவளே)

தோழியர் ஆறுதல் மொழியில் தலைவி ஆறுதல் பெற்ருளில்லை.

"......................கலுழ் சிறந்து
பூப்போல் உண்கண் புலம்புமுத் துறைப்ப" (மு. பா. 22-23)

நின்ருள் தலைவி.

(கலுழ் சிறந்து - கலக்கம் மிக்கு; உண்கண் - மை யுண்ட கண்; புலம்பு முத்துறைப்ப - தனித் தனியாக முத்துப் போலும் துளிகளைச் சிந்த)

துயில்கொண்டிருக்கும்பொழுது கார் போர் தொடுக்க விருக்கையில் அருகே தலைவனைக் காணுத தலைவி,

"......................துயருழந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியும் ஒடுவளை திருத்தியும்
மையல் கொண்டும் ஒய்யென உயிர்த்தும்
ஏவுறு மஞ்ஞையின் நடுங்கி இழைநெகிழ்ந்து
பாவை விளக்கில்" (மு. பா. 80-85)

தலைவன் வருகையை நினைந்தேங்குகிருள்.

(நெஞ்சாற்றுப் படுத்த - நெஞ்சைப் போர்க்களத்துக்குச் செலுத்த; புலம்பொடு - தனிமையுடன்; ஒய்யென உயிர்த்து - 'ஒய்' என்ற ஒலியுடன் பெருமூச் செறிதல்; ஏவுறு மஞ்ஞை - அம்பு தைக்கப் பெற்ற மயில்; இழை - அணி)

முல்லைப் பாட்டுரைத்த கார் நோக்கிய தலைவியின் நிலை முன் சொன்னவாறு அமைந்துள்ளது.

"ஐந்திணை யைம்பது மார்வத்தி னேதாதார்
செந்தமிழ் சேரா தவர்."

மாறன் பொறையனுரின் முல்லைத் திணைப் பாடல்கள் கார் வரவுக்கு முன் தலைவன் வருகையைத் தலைவி எவ்வாறு எதிர் நோக்கி நிற்கின்ருள் என்பதை அறிய உதவும். மல்லரை வென்ற கண்ணன் நிறம் போல் இருண்டு, கடப்பந்தாரினை விரும்பும் முருகன் வேல் போல மின்னி முப்புரங்களை யெய்த சிவபெருமான் அணியும் கொன்றைமாலை போலப் பூத்து எழுந்தது இக் கார் என்று தோழி தலைவிக்குப் பருவங் காட்டினுள்.

"அணிநிற மஞ்ஞை யகவ விரங்கி
மணிநிற மாமலைமேற் ருழ்ந்து—பணிமொழி
கார்நீர்மை கொண்ட கலிவானங் காண்டொறும்
பீர்நீர்மை கொண்டன தோள்" (ஐந். ஐம்பது. 2)

என்று பருவங் கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லிப் புலம்பினள். வானத்தைப் பார்க்குந்தோறும் கண்களில் நீர் துளிக்கின்றது என்றும் தலைமகள் தோழிக்குரைக்கிருள்.

"கோடுயர் தோற்ற மலைமே விருங்கொண்மூக்
கூடி நிரந்து தலைபிணங்கி—யோடி
வளிகலந்து வந்துறைக்கும் வானங்காண் டோறுந்
துளிகலந்து வீழ்தருங் கண்." (ஐங். ஐம்பது-3)

(கொண்மூ - மேகம்; நிரந்து - மிடைந்து. வளி - காற்று.)

'உயர்ந்த குவடுகளுடைய மலைகள்மேல் பெருமுகில்கள் திரண்டு இணைந்து ஒன்ருேடொன்று மோதிக் காற்ருேடு கலந்துள்ள விசும்பு காணுந்தோறும் என் கண்களில் நீர் ததும்பும்' என்று தோழிக்குத் தலைமகள் உரைக்கிருள் என்பது பொருளாகும்.

கார் கால வருகைபற்றித் தலைமகளுக்கும் தோழிக்கும் இடையில் கருத்து வேறுபாடு தோன்றுகிறது. தலைமகளோ கார்காலம் வந்துவிட்டது என்று கருதுகிருள். தோழியோ அவ்வாறில்லை என மறுக்கிருள்.

"வருவர் வயங்கிழாய் வாளொண்க ணீர்கொண்
டுருகி யுடன்றழிய வேண்டா—தெரிநியேற்
பைங்கொடி முல்லை யவிழரும் பீன்றன
வம்ப மழையுறக் கேட்டு." (ஐங்-ஐம்பது 9)

'விளங்கிய இழைகளையுடையாய்! நங் காதலர் பருவம் வந்தால் வருவர்; வாளினை ஒக்கும் நின் கண் நீர் கொள்ள நீ யுருகி மாறுபட்டு அழிய வேண்டா; ஆராய்வாயாயிற் றன் பருவமல்லாமையின் நிலையில்லாத முழக்கங் கேட்டுப் பைங்கொடி முல்லைகள் அவிழரும்பு ஈன்றன காண்'* என்பது பழைய வுரையாகும். கோடையிடி முழங்கும் பருவமல்லாத காலத்தில் இடி முழக்கம் கேட்டு அதிர்ச்சியால் முல்லைகள் அரும்பின என்பது தோழியின் வாதம் ஆகும்.

தலைவியின் மனநிலையை அறிந்தவன் தலைவனன்ருே! 'கார் வருங் காலமாயிற்று; தேர் விரைக!' என்று தேர்ப் பாகனுக்குரைக்கிருன்.

''நூனவின்ற பாக! தேர் நொவ்விதாச் சென்றீக
தேனவின்ற கானத் தெழிநோக்கித்—தானவின்ற

* ஐந்திணையைம்பது மூலமும் உரையும். மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு. 1935

கற்புத்தாள் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி
நிற்பாணிலை யுணர்கம் யாம்.'' (ஐங்-ஐம்பது 10)

(நொவ்விதா - கடிதாக; நிற்பாள் + நிலை - நிற்பாணிலை; உணர்கம் - அறிவாம்).

இவ் வெண்பாவுக்குப் பழையவுரை அளிக்கும் பொழிப்புரை பின்வருமாறு: 'நூல் பயின்ற பாகனே! நின் தேர் கடிதாகச் செல்வதாக; தேன் பயின்ற காட்டினது அழகை நோக்கித் தான் பயின்ற கற்பென்னு நின்ற தாளினைச் செறித்து உயிர் காத்துக் கவுளின்மிசைக் கையூன்றி நிற்பாளது நிலைமையை நாம் சென்று அறிவாம்.'*

பாண்டித்துரைத் தேவர் பாடிய பத்தாவது காவடிச் சிந்துப் பாட்டு, 'கார் வரவு கண்டுந் தலைவன் றேர்வரவு காணுளாய்த் தலைவி தோழியோடு கவன்று கூறியது' என்ற தலைப்பில் உள்ளது.

மங்குலொக்கும் தண்குழல் மானே
இனியசெழும் கனிவிகரும்
மாமதுர மென்மொழித் தேனே

எனத் தோழியை அன்பொழுக விளித்துத் தலைமகள் தன் குறையைக் கூறுகிருள். ஐந்திணையைம்பதில் தலைமகளும் தோழியும் ஒருத்தியை மற்ருெருத்தி விளிப்பது தேன் பிலிற்றுகிறது. 'பணிமொழி', 'முல்லைமுகை வென்ற பல்லினுய்', 'ஒண்டொடி', 'நல்லாய்', 'செறிதொடி', 'திருந்திழாய்', 'வயங்கிழாய்' என்ற சொற்ருெடர்கள் தலைமகளுக்கும் தோழிக்குமிடையே நிலவும் இழைவும் குழைவும் என்பனவற்றைச் சிறப்புடன் தெரிவிக்கின்றன. சீர்கெழு செந்திலுறை நாதன் தன்னைவிட்டுப் பிரிந்துபோன வஞ்சத்தை எண்ணும்போது மனது நொந்து நனிதளர்ந்து வாடுகிறதென்றும் தன் வண்ணம் மாறுகிறதென்றும் தலைவி தோழிக் குரைக்கிருள். கருப்புவில்லை அநங்கன் வளைத்துப் போர் செய்து தன்னுவிசோரச் செய்கிருனென்றும் வருந்துகிருள். முன்பின் கருதாது முருகனைக் காதலித்தது வேதனைக்கிடமானது என்பதுவும் அவள் இழைத்ததவருே? எனினும் அவன் வந்து விட்டால் ஆசையும் தணியும், நெஞ்சமும் பணியும்.

விண்ணிலேகார் நண்ணு முன்னமே
விரைவில் சென்று வருவனென்ற
வேலர்மீளக் காணே னின்னமே—மயல்

மீறுதே துளி மாறிமாமுகில் தூயதேயவர் ஏறுதேரொலி
வீழுமோவென் செய்ய காதிலே

என்று நைந்துள்ளம் கன்றுதே தேமல்
விம்முதே பொற் கொங்கை மீதிலே

என்றுதேர் வருமோ கார் வருமுன் என்று புகார் சொல்கிருள் தலைமகள் தோழியிடம். முல்லைப் பாட்டில் தலைவி தலைவன் வரவுபற்றிக் கவலையுற்று இருக்கும்போது தலைவன் தேரில் பூட்டப் பெற்ற குதிரைகள் அவளுடைய

"அஞ்செவி நிறைய ஆலின." (மு. ப. 89)

குதிரைகளின் ஆரவாரம் தலைவன் வருகையை முன் கூட்டி அறிவிக்கவும் தலைவன் தேரோடின வழியோ தலைவனுக்கு இனிய காட்சியை நல்கிற்று—பின்வரும் இன்பத்தை முன்கூட்டி அறிவிப்பது போல்.

" வயிரும் வளையும் ஆர்ப்ப அயிர
செறியிலைக் காயா அஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடல் குவிமுகை அங்கை அவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கானநந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகில்
திரிமருப் பிரலையொடு மடமான் உகள
எதிர்செல் வெண்மழை பொழியும் திங்களில்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்
துணைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்டமாவே"

ஆலின.

(உயிர் - கொம்பு; வளை - சங்கு; அயிர - நுண்மணலிடத்து; கோடல் குவிமுகை - வெண்காந்தளின் குவிந்த மொட்டுக்கள்; வரகில் - வரகுக் கொல்லையில்; திரிமருப்பு - முறுக்குக்கொண்ட கொம்புகள்; இரலை - ஆண்மான்; துணைபரி - விரைந்து செல்லும் குதிரை).

சிவஞானபுரத்து வேலன் தேர் வரவை எதிர்நோக்கியிருக்கும் தலைவியை காமக் காய்ச்சல் பற்றிக்கொண்டது. அன்னமும் பாலும் பச்சை நாவிபோலக் கசக்கிறது. வானிலே தோன்றும் காரோ சூரன் குலம்போலத் திரண்டு நிற்கிறது. முருகப்பெருமான் அவன் சேனைமேலெய்த அம்புகள்போல மழையும் தூறுகின்றது. வேலன் வந்து மேவினுலன்றி தலைவியின் ஆவி யுய்யாது என்றும் தோழிக்கு அவள் சொல்கிருள்.

மங்கு லொக்கும் தண்குழல் மானே
இனியசெழும் கனிநிகழும்
மாமதுர மென்மொழித் தேனே—முன்பு
வந்தெனுடுக லந்துமேவிய செந்திநாதர் பிரிந்துபோகிய
வஞ்சகத்தை யெண் ணு தோறுமே
மன துநொந்து நனிதளர்ந்து
வாடுதேயெவ் வண்ணம் மாறுமே.

அங்கசன்க ரும்பு வில்லயே
வளைத்துவெம் போர் விளைத்திடவென்
ஆவிசோரு தென்ன தொல்லயே—இதை
ஆதியிற்கரு தாதுவைத்திடு காதலித்தனே வேதனைக்கிடம்
ஆன தினி யென்ன செய்கு வேன்
முருகனிங்கே வருகை கண்டால்
ஆசை தோயுந் தீர வுய்குவேன்

விண்ணிலேகார் நண் ணு முன்னமே
விரைவிற் சென்று வருவனென்ற
வேலர்மீளக் காணே னின்னமே—மயல்
மீறுதேதுளி மாறிமாமுகில் தூயதேயவர் ஏறுதேரொலி
வீழுமோவென் செய்ய காதிலே
என்று நைந்துள்ளம் கன்றுதேதேமல்
விம்முதேபொற் கொங்கை மீதிலே.

புண்ணிலேவீழ் அம்பு கள்போல
நெடிய வாடை படிதலாலே
பூசுசாந்தும் காயுதென் மேலே—அன்றிற்
புட்குலங்கள் து ணைக்கிரங்கிஅ ழைக்கு முன்பினும் மிக்க
போவதைப்பார் நெஞ்சு ருக்குதே [வன்பொடு
உடல்மெலிந்து திடனழிந்து
பூவமளி யும்வெ றுக்குதே.

நம்புதொண்டர் அன்பொடுஞ் சூழும்
வளங்குலவி விளங்குசிவ
ஞானமாபு ரந்தனில் வாழும்—குகன்
நாரிபாகர்கு மாரனாகிய வீரவேலுடை யாறுமா முகன்
நாவுமெய்யல் லாதி சைக்குமா
எனக்குமிங்கே யனத் தொடும்பால்
நாவிபோல வேகசக்குமா

வெம்புசூரன் றன்கு லம்போல
கொண்டல்கள் வானில் மண்டியெழுந்து
வெய்யவாள்போல் மின்னி மென்மேலே—அவர்
வீரவெங்கணை நேரெனும்படி மாரியுஞ்சில தூறுகின்றது
வேலவன்வந் தென்னை மேவியே
பரிவுகொண்டு மருவினுலிவ்
வேளையுய்யும் என்றறிவியே.

(தொடரும்)

---

## மறக்க ஒண்ணுமோ மறைமலைப் பெயரை?

[நாஞ்சில், கா. கணபதி]

தனித்தமிழ் இயக்கம் கண்டவர் யார்?
தண்டமிழ் உயர்வினை விண்டவர் யார்?
இனித்திடும் நூல்பல இயற்றிநமை
எழுச்சியோ டியங்கிடச் செய்தவர் யார்?
இனித்தமிழ் நாட்டினில் இந்திமொழி
இல்லை யெனும்படி செய்தந்த
பனித்திரை விலகிடச் செய்தவர் யார்?
பைந்தமிழ் மறைமலை அடிகளன்றோ! (1)

அண்மையில் தமிழக அரசினரும்
அணியார் தஞ்சை மாநகரில்
எண்ணி அமைத்தனர் கலைக்கழகம்
எனினும் அதன்புகழ் ஓங்கிடவே
திண்மையோ டந்த மறைமலையின்
திருப்பெயர் தன்னை இணைத்திருந்தால்
மண்ணுள் வோரும் மகிழ்ந்திடவே
மறைமலைப் பெயரும் நிலைத்திடுமே! (2)

மறைமலை யடிகளார் பெயர்சேர்த்தால்
மாண்புறும் தமிழ்ப்பல் கலைக்கழகம்
குறையா வளந்தரும் அருங்கலைகள்
குன்றின் விளக்கென ஒளிதருமே!
முறையாய் அடிகள் பெயர்விளங்க
முன்னைத் தமிழின் புகழோங்க
மறைமலை தமிழ்ப்பல் கலைக்கழகம்
மாண்புடன் நாளும் விளங்கிடுமே. (3)

---

# நெல்லையில் செங்கோடு

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,

கூட்டுறவுப் பதிவாளர் (ஓய்வு)
23, கல்யாண்ஜி வீதி, பொள்ளாச்சி.]

பல வைணவத் திருக்கோயில்களில் திருமால் மூலவராகக் காட்சியளிக்கின்றார். அவை 36 வகை என ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளன. அழித்தல் தொழிலை மேற்கொண்டவராகக் கருதப்படும் சிவபெருமானைக் 'கங்கைவார் சடைக்கரந்தான்', 'பிறை சூடிய பெம்மான்' ஆகிய அருள்வடிவங்களாகவும், ஆல நிழற்கீழ் அறம் நால்வருக்கு உரைத்த ஆலமர் செல்வனாகவும், முதுகாட்டில் நடம்புரியும் ஆடல்வல்லானாகவும் வடிக்கலாம் என ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளது. இருப்பினும் சிவன்கோயில்களில் சிவபெருமான் பொதுவாக இலிங்கத் திருவுருவில்தான் மூலவராகக் காட்சி அளிக்கிறார். இதனின்றும் ஒரு சில கோயில்கள் மாறுபட்டுள்ளன. அவற்றுள் ஒன்று சேலம் மாவட்டத்தைச் சார்ந்த திருச்செங்கோடு.

சிலப்பதிகாரத்திலே பேசப்பெறும் திருச்செங்கோடு என்றாலே "நாலாயிரம் கண்படைத்திலனே அந்த நான்முகனே" என அருணகிரிநாதரால் சிறப்பிக்கப்பெற்ற செங்கோட்டு வேலனும், அங்கு மூலவராக எழுந்தருளியிருக்கும் "உமையோர் கூறுனும்" நினைவிற்கு வருதல் இயற்கையே. திருச்செங்கோட்டைப் போன்றே "உமையோர் பாகந்தரித்த" வடிவில் சிவபெருமான் மூலவராகத் திருப்பரங்குன்றம் உமையாண்டார் குடைவரைக் கோயிலிலும், நெல்லை மாவட்டம் வாசுதேவநல்லூர் சிந்தாமணி நாதர் திருக்கோயிலிலும் காணப்படுகிறார்.

தென்காசியினின்றும் மதுரை செல்லும் பெருவழியில் 'வாசுதேவநல்லூர்' என்னும் ஊர் உள்ளது. அங்குச் சிவபெருமான் உமையவருக்கு ஆணொடு பெண்ணாகிய பெம்மானாகப் புளியமரத்தடியில் (சிந்தம்) காட்சி அளித்த காரணம்பற்றிச் சிந்தாமணி நாதர் என்று அழைக்கப்படுகின்றனராம். கருவறையில் நான்கு கைகளுடன் "பஞ்சுண்ட மெல்லடியாள் பங்கனாக"த் தோற்றம் அளிக்கிறார். முன்வலக் கையில் கபாலமும், பின்வலக் கையில் சூலமும், சிவன் என்பதற்கிணங்க அமைக்கப்பட்டுள்ளன. முன் இடக் கையில் நீலோற்பல மலரும், பின் இடக் கையில் பாசமும் அம்மை

என்பதற்கேற்ப உருவாக்கப்பட்டுள்ளன. திரிபங்க நிலையில் நிற்கும் இந்த வடிவத்தின் பெண்பாதியில் கால் சிறிது மடிந்து எழிலாக அமைந்து இருப்பது குறிப்பிடத்தக்கது. வலக் காதில் குழையும், இடக் காதில் தோடும் காணப்படுகின்றன. பெண் என்பதற்கிணங்க மார்பின் இடப் பாகத்தில் கொங்கை காணப்படுகிறது. ஆகம விதிகளின்படி வலப் பக்கம் சடாமகுடமும் இடப் பக்கம் கரந்த மகுடமும் இருக்கவேண்டும், ஆனால் இங்குத் தலையில் கிரீடமகுடம் காணப்படுகிறது. மேலும் இத்தகைய வடிவங்களுடன் அண்ணலின் ஊர்தியாம் விடை காட்டப்படவேண்டும். ஆனால் இங்கு எருது இல்லை என்பது கவனிக்கவேண்டிய ஒன்று.

இந்து சமயத்தில் ஆறு சமயங்கள் பேசப்படுகின்றன. அவற்றில் சிவனே முழுமுதற் கடவுள் என்பது சைவ சமயம். சக்திதான் முழுமுதற் பொருள் எனக்கொள்வது சாக்தம். ''உமையாளை ஒருபாகத்து அடக்கிய'' வடிவு, சைவம் மற்றும் சாக்தம் ஆகிய இரு சமயங்களுக்குள் ஏற்பட்ட சமரசம் என அறிஞர்கள் கருதுகின்றனர். ''சிவன் இன்றேல் சக்தி இல்லை. சக்தி இன்றேல் சிவன் இல்லை'' என்றும்,

''சிவஞ் சக்திதன்னை யீன்றும்
சக்திதான் சிவத்தை யீன்றும்''

என்றும் சொல்லக்கூடிய அளவிற்கு ஏற்பட்ட சமரச மனப்பாங்கின் விளைவுதான் இந்த வடிவம். ''மையமர் கண்ணியாளும் மாலுமோர் பாகமாகி'' என்ற அப்பர் திருவாக்கிற்கேற்ப மலைமகளும், மாயவனும் சிவபெருமானின் ஒருபாதியில் உள்ளதாகச் சொல்லப்படுகிறது. மால் ஒருபாதியாக உள்ள சங்கரநாராயணன் எழுந்தருளியுள்ள சங்கரன் கோயிலுக்கு அருகிலேயே மாது ஒரு பாகமான அர்த்தநாரீசுவரர் அருள் பாலிக்கும் வாசுதேவநல்லூர் அமைந்துள்ளது பொருத்தமாக உள்ளது.

கோயிலை அணிசெய்யும் கோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றால், தெற்கு வெளித் திருச்சுற்றில் கோயில்மரமான புளிய மரம் உள்ளது. இதனை அடுத்து ஆயிரம் கோட்டை நெல் கொள்ளக்கூடிய பெரிய நெற்களஞ்சியம் உள்ளது. மேலும் திருமண மண்டபம், ஊஞ்சல் மண்டபம், மற்றும் நடராசர் திருமுன் ஆகியவை உள்ளன. நடராசர் திருமுன் உள்ள யாளி ஒன்றின் வாயில் வெளியே எடுக்க இயலாத உருண்டையான கல் ஒன்று உள்ளது. இத்தகைய சிற்பவேலைப்பாட்டினை மதுரை, சுசீந்திரம் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களிலும் காணலாம்.

இறைவனது திருமுன் எதிரே அழகிய மண்டபம் ஒன்று உள்ளது. அதன் மேற்கூரை ஒரே கல்லால் உருவாக்கப்பட்டுள்ளது. அதைத் தாங்கும் தூண்களில் பல சிற்ப வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. மரத்தாலான கொடுங்கைகளைப் போன்று இம் மண்டபத்தின் கல்லாலான கொடுங்கைகளும் எழிலுடன் அமைக்கப்பட்டுள்ளமை கண்டு இன்புறத்தக்கது. இம் மண்டபம் நம் முன்னோரின் கலைத்திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

இங்குள்ள செப்புப் படிமங்களுள் குறிப்பிடத்தக்கவை மங்கை பங்கனும் (அர்த்தநாரீசுவரர்), பிருங்கிமுனிவர், இரவிவர்மன் என்ற கேரள மன்னன் ஆகியவையாம். பிருங்கிமுனிவர் சிவனை மட்டும் வணங்கித் தம்மை வணங்காத காரணத்தால் இறைவி கோபமுற்றுளாம். இறைவனும் இறைவியும் ஒருருவமாக இருப்பின் முனிவர் தம்மையும் வணங்குவார் என அன்னை கூறியதற்கேற்ப, சிவன் தம் உடம்பில் ஒரு பாதியை மலைமகளுக்கு அளித்துவிட்டாராம். இருப்பினும் முனிவர் வண்டுருக் கொண்டு இறைவனின் உடலின் நடுவே ஊடுருவிச் சென்று சிவனை மட்டும் வணங்கினுர் எனப் புராணம் கூறுகிறது. அர்த்தநாரீசுவர வடிவத்துடன் இவ்வாறு நெருங்கிய தொடர்பு கொண்ட பிருங்கி முனிவரின் செப்புப்படிமம் இங்கு உள்ளது. குட்டநோய் நீங்கிய காரணத்தால் 'இரவிவர்மன்' என்ற கேரள மன்னன் இந்தக் கோயிலைக் கட்டியமையால் அவனது செப்புச் சிலையும் இங்குக் காணப்படுகிறது.

கி. பி. 15 முதல் 17ஆம் நூற்றுண்டுவரை பாண்டிய மன்னர்கள் தென்காசி, கரிவலம் வந்தநல்லூர் ஆகிய இடங்களைத் தலைநகரமாகக்கொண்டு தென்பாண்டி நாடான இப் பகுதியை ஆண்டுவந்தனர். இரண்டாம் பாண்டியப் பேரரசுக்குப் பின் நாட்டை ஆண்ட இவர்கள் பிற்காலப் பாண்டியர்கள் எனப் பட்டனர். திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதி, திருக்கருவை கலித்துறையந்தாதி ஆகிய நூல்களை இயற்றிய வரதுங்கராம பாண்டியனின் தந்தையும், 'நைடதம்' இயற்றிய அதிவீரராமபாண்டியனின் சிறிய தந்தையுமாகிய சடையவர்மன் குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் காலத்தில் இந்தக் கோயில் செப்பனிடப் பட்டதாகத் தெரிகிறது.

பாண்டிய நாட்டில் உள்ள கோயில்களில் சிவபெருமான் "நுண்ணிடையாள் பங்கினன்" வடிவில் மூலவராகக் காட்சி அளிக்கும் தனிப்பெருஞ் சிறப்புடையது இந்தக் கோயில். இதனை 14ஆம் நூற்றுண்டைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.

---

# வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளும், தண்டமிழ்க் கவிகளும்

[தவத்திரு தி. செ. முருகதாச அடிகள், திருவாமாத்தூர்]

தண்டபாணி யென்றும் முருகதாசர் என்றும் பெயர்கொண்டு ஒரு சிலர் அன்றும் இன்றும் இருப்பதை அறிகின்றேம். ஆதலின் தண்டபாணி அடிகட்கு ''வண்ணச்சரபம்'' என்ற சிறப்புப் பெயரை அவருடன் பழகியும், வண்ண இலக்கணப் பாடம் கேட்டும், பாடியும் வாழ்ந்த பெரும் புலவர்கள், அடிகளது வண்ணக் கவிப் பேராற்றலைக் கண்டு வழங்கிய பெயரே அது வாகும். அப்படி வண்ணமென்ற பெரும்பாடலியற்றும் புலமை அடிகட்கு இயல்பாக வாய்த்த பயனுகும். அது முன்னைய தவத் தால் அமைந்த நற்பேறு என்னலாம்.

இனி, 'வண்ணம்' என்பது பெரிய சந்தக்குழிப்புகளாலான பாடல். இஃது அகப்பொருட்டுறைகளை யமைத்துப் பாடப்பெறு வது. இப் பாடல்களை எவரோ ஒரு சிலர் ஒன்று பாடியிருப் பார்கள். இந்த அடிகளார் தெய்வப் புகழ்ப் பாடல்கள், திரு அரங்கத் திருவாயிரம், பழனித் திருவாயிரம், தில்லைத் திருவாயி ரம் போன்றவற்றில் ஒவ்வொன்ருகப் பன்னிரண்டு வண்ணப் பாடல்களை இணைத்துப் பாடியுள்ளார். திருநெல்வேலிக்குப் பாடிய கலம்பக நூலில், பெண்பாற் கைக்கிளை யென்ற முறையில், தய்யச் சந்தம் மிக அமையும்படி பாடியது சிறப்பாகும். நெல்லை என்ற சொல்லில், தய்யச் சந்தமே மிக வரும். தத்த, தாத்த, தந்த, தாந்த, தன்ன, தய்ய, தன, தான என்ற சந்தம் எட்டி னுள், தன்னவும், தய்யவும் மிகவும் கடினமென்று, தாமியற்றிய 'வண்ணத் தியல்பு' என்ற இலக்கண நூலிற் கூறியிருப்பதால் அறியலாம்.

வண்ணத்துக்கெனத் தனி இலக்கணம் இல்லாமலிருந்ததை அடிகள் தாம் இயற்றினர். இக் கருத்தை 'வில்கால் வேலன் அருட் டுணையால் யானே விதித்தேன்' என இவர் கூறியிருப்பதால் அறிகிரேம். எந்தக் கவியினையும் ஒரே தடவையிற் பாடுவதும் பனையோலை யேட்டிலெழுதுவதும் அடிகளது இயல்பு. ஏட்டில் வரிவடிவம் அழகாயிருக்கும். புலவர்களில் ஐந்து வகை கூறுவர். அவை : குரங்கு, யானை, சிங்கம், சரபம், மேகம் என்பன. தாம் கொண்ட ஒரு கருத்தைப்பற்றிப் போராடுபவர் குரங்கினம்— பாடுவதில் பேசுவதில் தம்மைத் தாமே மதிப்பவர் மதயானை வகை யினர். இத்தகையோரை வாதில் வெல்பவர் சிங்கத்துக்கு

ஒப்பாவர். இவரையும் வெல்பவர் சரபம் என்ற வீரப்பறவைக்கு நிகராவர். கைமாறு வேண்டாக் கடப்பாட்டினையுடைய மேகம் போன்று பலருடைய பாராட்டையோ, பயனையோ விரும்பாமல் உலக நலங் கருதிப் பாடுபவர் மேகம் போல்பவர் என வழங்கப் பெறுவர். முதலாவதான, குரங்கு என்ற ஒன்றை ஒதுக்கி,

'மத்தகக் கரிவண் சிங்கம்நேர்புலவர்
வணங்க வண்சரபமாத் திகழ்வாய்'

என்று பாடிப் பரவினர். அவர்களுடன் பழகியும் வண்ண இலக்கணப் பாடம் பயின்றும் வாழ்ந்த பெரும் புலவர்கள் வியந்து மகிழ்ந்து சூட்டிய பெயரே 'வண்ணச்சரபம்' என்ற பட்டப் பெயராகும்.

அப்படி அடிகளுடன் நெருங்கிப் பழகிய புலவர்கள், வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முதலியார், அட்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியார் ஆவர். இவ் விருவரும் துறவு மேற்கொண்டு முனிவரென்ற பெயரில் இருந்தவர்கள். இவர் போன்ற பலருள், கலியாணசுந்தர யதீந்திரர் கூறிய சாத்து கவிகளுள் ஒன்று இங்கே நினைவு கூரவுள்ளது. அடிகள் காலத்துக்கு முன் வாழ்ந்த புலவர்களை விளித்து வினவுகின்ற முறையில் உள்ளது அது.

''சந்த நாவலர் என்ற பேரினை—உடையோரே
தங்கள் நாளினில் இந்தநூல் விதி—இலையேயோ
இந்த நாளினில் இங்கு வாழ்வுறில்—நகையேயாம்
என்று வானிடைசென்று வாழ்வதும்—முறையேயாம்''

என்பதாம்—'வண்ணம்' என்றாலும் 'சந்தம்' என்றாலும் ஒன்றே. மேலும் விரிக்கிற் பெருகும். 'வண்ணச்சரபம்' என்ற பெயர் வர வேண்டியதனை விளக்க இவ் விவரம் கூறலாயிற்று. மற்றும் சென்னை கந்தசாமி கோயிலில் அடிகள் பிள்ளைத்தமிழ் பாடி அரங்கேற்றியபோது அப் பேரவையில் ஏற்பட்ட தர்க்கம் ஒன்றில், தக்க சான்றுடன் சந்தம்பற்றிய ஐயத்தை விளக்கினர். முடிவில் அவர் 'நல்ல நிர்வாகி' என்று பாராட்டப்பெற்றனர் என்று வரலாற்று நூலிற் கூறியுள்ளார்.

'முற்றுணர்ந் தேம்என முறுமாப்பு எற்கின்றே
எனினும் வண்ண முறைமை மட்டில்
சற்றுமெனைச் சார்ந்தோர்க்கும் சந்தேகம் இன்றெனவும்
சாற்றினேன்''

என்பர். எதுவும் தெய்வ முன்னிலையில் செயற்படுவதால் தோல்வி ஏற்படுவதில்லை. இப்படிப் பல.

பாடலியற்றுங்கால் எந்த யாப்பில் எந்தக் கருத்தை அமைப்பது என்பதைச் சற்றும் எண்ணுவதில்லை. உள்ளுணர்வில் திருவருள் தூண்டும். தாம் கருவியாயிருந்து எழுதுவர். பாடல் ஒன்றையொன்று தொடர்ந்து வரும்—அது வரும் விரைவுக்கேற்ப எழுத முடிவதில்லை. முடியுமுன் வேறு ஒரு பொருளில் கவிதை முடியும். முடிந்த பின்பு, தாம் அவற்றைப் படித்து, தாம் வேரு யிருந்து உணர்வது பழக்கம். இக் கருத்தினை,

''என்மனதில் ஒன்றெண்ண என்கைமற் றொருவண்ணம்
எழுதிடு மியற்கை கண்டும்''

எனவும்,

''முடியவு மனத்திற் சமைந்தஓர் கவியை
முன்னியான் எழுதிடத் துவக்கின்
நெடிதுபோய் ஒளிப்ப மற்றொரு பாடல்
நிகழ்த்தலும் நின்செய லன்றோ''

எனவும்,

'கான்மடக்கிக் கைகுவித்து யோகப்பட்டிகை கவின்றர இருந்து ஞானக்—கண்திறந்து ஊனக் கருங்கண்மூடிக் கருத்துக் கிசைந்த வண்ணம், போன்மகா குருவடிவம்நாடி மந்திரமொன்று போற்றும் அத் தருணத்திலும், பாதியைச் செழுந்தமிழ்க் கவி வந்து நனி போராடவிடு தெய்வமே' எனவும்,

'புலவர் புராணம்' என்ற வரலாற்று நூலில், பொதுப்பாயிரம் பாடி முடித்தனர். அடுத்து வருவது சிறப்புப் பாயிரமென்று தாம் எண்ணுவதாகக் கூறியுள்ளனர். எனவே, எதையும் தாம் திட்டமிட்டுப் பாடுவதில்லையென்பது புலனாகிறது.

'துதியே, பிறங்கு பொதுப்பாயிரத்தைப்
பேசியமட் டடக்கி வருசிறப்புப் பாயிரமென்
றுன்னுகின்றேன் கவிதை—வந்தபின் பார்த்து
உவப்ப தென்றன் வழக்க முலகீரே''

எனவும்,

தொடர்ந்து கவிதை வருமென்பதை—

''திடமிஞ்சிய செங்கதிர்வேல் முருகோன்
இடமென்றுளிர் என்மனமாம் வெளியிற்
கடலின்றிரை யிற்கவி வந்தெழுதாது
உடனங்கழி வுற்றன பற்பலவே,

எனவும், ஆங்காங்கே கூறியுள்ளனர். (தொடரும்)

# தமிழே! நீயோர் கூர்வாள்!

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

என்னுயிர் நாளும் போற்றும்
இன்னருந் தமிழே; தாயே;
மண்மிசை முதலில் தோன்றி
மற்றைய மொழிகட் கெல்லாம்
அன்னையாய் விளங்கு கின்ற
அருங்கலை ஆற்றல் ஊற்றே;
உன்னினங் காக்க வாழும்
உணர்வினன் வாழ்த்த வாழி!

சங்கநூற் புலவர் நாவில்
தென்றலாய்த் தவழ்ந்த பாவாய்!
சிங்கமும் மருண்டு ஓடும்
சிம்புளின் அருமைத் தோழி;
எங்களைத் தகர்க்க எண்ணும்
எவர்க்குமே நீயோர் கூர்வாள்;
மங்கையர் உறவும் அன்பும்
மணிமொழி! உன்முன் தூள்; தூள்!

வள்ளுவம் வழங்கி நின்றாய்;
வானுயர் புகழுங் கொண்டாய்;
தெள்ளிய சிலம்பைத் தந்து
தென்னவர் பண்பைக் காத்தாய்;
பல்சுவை அமுதம் தேக்கிப்
'பா'வியம் பலவும் ஈந்தாய்;
தள்ளுவ தள்ளி; நன்மை
தழுவுவன் வாழ்த்த வாழி!

வரைவிலாப் புலமைக் குன்றம்;
வள்ளலார்; குழந்தை அண்ணல்;
மறைமலை அடிகள்; பாவின்
வேந்தர்; தேவ நேயர்;
நிறைகுடப் பெரியார் தந்தை;
நீள்புவிப் போற்றும் அண்ணா;
மரபினில் வந்த நானோர்
மாண்பினன் வாழ்த்த வாழி!

---

# அமரர் நீதிபதி மகராசன் அவர்களுக்கு அஞ்சலி

[பேராசிரியர் கு. சிவமணி]

பிறந்தநாளின் மங்கலங்கள் மாறுமுன்னே,
மலர்மாலை வாடு முன்னே,
சிறந்தோங்கு வாழ்த்தொலிகள் ஒடுங்குமுன்னே,
உடலென்னுங் கூடு விட்டுச்
சிறகடித்(து) உயிர்ப்பறவை பறந்ததுவும்
அறமாமோ ஐய மகராச!
இறகிழந்த என்பாட்டுப் பறவைபெரு(ம்)
இடர்க்கடலில் துடிக்கு தையா!

குழந்தைமுகச் சிரிப்பென்றும் குடியிருக்கும்
காரணத்தால், தங்க ளுக்கே
அழுதமுகம் பிடிப்பதில்லை, அறிவேன் நான்;
அழநேர்ந்தால், அழுகை தானும்
பழகுதமிழ்ப் பாட்டானால் தாளமிட்டுச்
சுவைப்பீர்கள் என்ப தால்என்
அழுகையைப் பாட்டாக்கி அரங்கினிலே
படைக்கின்றேன்; பணிவன் போடு!

யாரொருவர் இடருற்றார், அவரிடரைத்
துடைப்பதற்காய் விரையும் நெஞ்சம்,
யாரொருவர் நீர்வடித்தார், அவர்கண்ணீர்
மாற்றுதற்காய் நீளும் கைகள்,
யாரொருவர் துயருற்றார், அவர் துயரை
ஆற்றுதற்காய் அமையும் சொற்கள்,
யார்பெற்றார் தங்களைப்போல்! எம்மைப்போல்
இவைபெறவே பேறுஆர் பெற்றார்?

மந்திரத்துள் மந்திரமாம் திருமூலர்
மந்திரமே! மறைவாய்ச் சொன்ன
தந்திரங்கள் தமையெல்லாம் தவவலியால்
கண்டுகொண்ட கரும யோகி!
யந்திரங்கள் வழிநின்று இறைவேள்வி
ஒளிபெற்ற ராச யோகி!
சுந்தரமாய் சிவமயமாய் சத்தியமாய்
ஆனபெரும் ஞான யோகி!

சும்மாதான் இருக்கின்ற சுகத்துள்ளே
துயில்கின்ற ராச ராச !
கம்பருடன் வள்ளுவரில் கால்கொள்வீர் ;
ரசிகமணி கடிதந் தன்னில்
நம்பிக்கை ஒளிதந்து மகராச
னுயிருப்பீர் ; இதயம் வாழ்வீர் ;
எம்மிடையே உணர்வாக உரையாக
உலவுகின்றீர், நன்றி சொல்வேன்.

குருநாதர் ரசிகமணி பிறந்தநாளில்,
திருவார்ந்த சீடர் தாங்கள்,
திருநாடு பொருந்தியமை, இறைமைசான்ற
வாழ்வுக்கோ(ர்) எடுத்துக் காட்டு!
அருமைமிகு வரலாறு அமரயாத்
திரையின்போதும் வரைந்த ஐயா !
பெருமைமிகு திருமுன்றில் கண்ணீரைக்
காணிக்கை ஆக்கு கின்றேன்.

நெஞ்சமெனும் குளத்தில்கல் லெறிந்துவிட்டால்
நீர்வளையம் எழுவ தைப்போல்,
கொஞ்சமாநும் நினைவலைகள் ! கோடியென்றுல்
பெரிதாமோ ? உணர்வு பொங்க
நெஞ்சிலுதிர் மலரெடுத்து நினைவுநாரிற்
சரஞ்தொடுத்துக் கண்ணீர் மாலை,
மஞ்சத்தில் வைக்கின்றேன், வணங்குகின்றேன்,
மகராச ராச, போற்றி!

———

## "மழைவேண்டல் பதிகம்" ஓதுதல்

17—10—1982 ஞாயிறன்று மாலை 5-00 மணிக்குப் பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றம் (மறைமலையடிகள் இல்லம் 34, சாவடித் தெரு, பல்லாவரம்) சார்பில் திருமுருக விசாகநம்பி அவர்களால் திருஞானசம்பந்தர் அருளிச் செய்த தேவாரத் திருப் பதிகங்கள் ஏழும் மேகராகக் குறிஞ்சிப் பண்முறையில் ஓதப் பெற்றன. அன்று இரவே அப் பகுதியில் கடும் மழைபெய்து தொடர்ந்து நாடு குளிர்ந்தது குறிப்பிடத்தக்கது.

# செய்திகளும் குறிப்புகளும்

## டாக்டர் நடுவர் எஸ். மகராசன் அவர்கள் மறைவுக்கு இரங்கல் கூட்டம்

மறைந்த முன்னாள் நடுவரும், தமிழிசைச் சங்கத் தலைவருமான டாக்டர் நடுவர் எஸ். மகராசன் அவர்களின் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் முகத்தான் 6—10—82 அன்று மாலை, சென்னை அண்ணா சாலையிலுள்ள இராணி சீதை மன்றத்தில் உயர்நீதிமன்ற நடுவர் திரு. பு. ரா. கோகுலகிருட்டிணன் அவர்கள் தலைமையில் இரங்கற் கூட்டம் நடைபெற்றது. செட்டி நாட்டரசர் டாக்டர் ராசா சர் முத்தையா செட்டியாரவர்கள் டாக்டர் மகராசன் அவர்களின் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்து உரையாற்றினார். சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சி., நடுவர்கள் எஸ். நடராசன், எஸ். மோகன், ஆர். செங்கோட்டுவேலன், பி. எஸ். சோமசுந்தரம் ஆகியோரும் மற்றும் பொன் பரமகுரு, இக்னேஷியஸ் இருதயம் அடிகளார், பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், டாக்டர்கள் நன்னன், என். தேவநாதன், ஆர். எம். சுந்தரம், கல்கி இராசேந்திரன், பேராசிரியர் கு. சிவமணி, கவிஞர் வைரமுத்து ஆகியோர் மகராசனின் சிறப்புகள்பற்றி உரையாற்றினர். திரு. மீ. ப. சோமு அவர்கள் நன்றி நவின்றார்.

## நாலடியார் உரை வெளியீடு, பாரதியார் விழா

பாளையங்கோட்டை, மாவிலத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 6—11—82 அன்று, மேட்டுநிலச் (ஐகிரவுண்டு) சாலை துளசிவளாகத்தில் முன்னாள் சட்டமன்றத் தலைவர் எஸ். செல்லபாண்டியன் அவர்கள் தலைமையில் நாலடியார் உரை வெளியீடும், பாரதியார் விழாவும் நடைபெற்றன. உயர்நீதிமன்ற நடுவர் இரத்தினவேல் பாண்டியன் அவர்கள் நூலினை வெளியிட்டார். மறைத்திரு. வி. வி. ஞானப்பிரகாசம் அடிகளார் ஏற்புரை கூறினார். பேராசிரியர் சிவ. இராமச்சந்திரன், மறைத்திரு. சவரிமுத்து அடிகளார், புலவர் ஆபிரகாம் அருளப்பன், பேராசிரியர் செபரத்தினம், அறிஞர் க. சுப்பிரமணியம் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். அறிஞர் சு. இன்னாசி சிறப்புரை ஆற்றினார். திரு. அ. இ. முத்துக்குமாரசாமி நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## தத்துவ சமய சொல்லகராதி வெளியிட டாக்டர் ம. பொ. சி. வேண்டுகோள்

தமிழகச் சட்ட மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் 30—10—82 அன்று தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு வருகை தந்து அனைத்துத் துறைகளையும் பார்வையிட்டபின் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தில் பேசியபோது இருபது ஆண்டுகட்கு முன்பே தமிழ்ப் பல்கலைக் கழகம் துவக்க வேண்டுமென்ற கருத்தைத் தாம் செங்கோல் இதழில் எழுதியதாகவும் பத்தாண்டுகட்கு முன்னர் சட்டமன்றத்திலும் இதுபற்றிக் கூறியதாகவும் குறிப்பிட்டார். அத்துடன் இப் பல்கலைக் கழகம் தத்துவ சமயச் சொல்லகராதி ஒன்றினைத் தயாரிக்க வேண்டும் எனவும் குறிப்பிட்டார்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-ருஎ, அசஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
கழக ஆட்சியாளர் ரூ. 10—00
,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் 5—00
,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை 5—00
,, கோட்டூர் எம். கோவிந்தராசு முதலியார் அவர்கள்
சென்னை-85. (மகள் திருமண நன்கொடை) 5—00
,, சந்தான பாண்டியன், B.Sc., D.M.S., M.B.S.,
இராயபுரம், சென்னை-13. 10—00
,, மு. சுப்பையா, கும்பகோணம் 5—00
,, எம். இராமச்சந்திரன் பிள்ளை அவர்கள்
திருவானைக்கோவில் 100—00
,, டாக்டர் ஜி. விசுவநாதபிள்ளை அவர்கள், திருவரங்கம் 25—00
,, புலவர் சினி சம்பத், எம். ஏ., சென்னை-11. 5—00
,, திரு. விசாக நம்பி, சென்னை 5—00

# மதிப்புரை

### வாழ்வது எப்படி?

ஆசிரியர்: மு. முத்துக்காளத்தி, எம். ஏ., கிடைக்குமிடம்: பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை-1; விலை: உருபா 4-50.

வாழ்க்கை வாழ்வதற்காகத்தான் அமைந்துள்ளது. ஆனால் சூழ்நிலை, ஊழ்நிலை இவற்றால் வாழ்க்கையில் மேடு பள்ளங்கள் ஏற்படுகின்றன. இம் மேடுபள்ளங்களைக் கடக்க, 'எப்படியாவது வாழ்வது' என்று சிலரும்—ஏன்—பலரும், 'இப்படித்தான் வாழ்வது' என்று சிலரும் சில முறைகளைக் கடைப்பிடிக்கின்றனர். இவருள் பின்னவர் வாழ்க்கையில் இடர்ப்பாடுகள், இன்னல்கள், ஏக்கங்கள், கவலைகள் ஏற்படுவது இயல்பு. இந்நிலையில் வாழ்வது எப்படி என்பது சிந்திக்க வேண்டிய செய்தி. அச் சிந்தனைக்குத் தூண்டுகோலாய் அமைந்துள்ளது இந்நூல். இதில், படிப்போர்க்கு ஊக்கமூட்டும் வகையில் (Inspiration) பதினான்கு தலைப்புகளில் சில நல்ல கருத்துகளைக் கூறுகிறார் இந் நூலாசிரியர். அவற்றை விரிக்கின் பெருகும். ஆசிரியர் முயற்சி பாராட்டத் தக்கது—வரவேற்கத் தக்கது—பயனுள்ளது. படித்துப் பாருங்கள்.

### வரப்பெற்றோம்:

### ஓம் முருகா போற்றித் திருஅகவல்

திருமுறைத் தொகுப்பு: தமிழகக் கோயிற் கலைச்செல்வர், தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத், கூட்டுறவு சங்கங்களின் இணைப்பதிவாளர் (ஓய்வு) 23, கல்யாண்ஜி மில் வீதி, பொள்ளாச்சி. அருட்செல்வர்களின் திருவாக்குகளினின்றும் தொகுக்கப்பெற்றது. 'மு' அல்லது 'மூ' எழுத்தை முதலாகக் கொண்டுள்ள மாண்பினை உடையது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

கழகக் நிலையங்களில் கிடைக்கும்

## பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| எண்ணமும் செயலும்—வே. மு. மந்திரம் எம். ஏ பி. டி. | 10 | 00 |
| கல்கி சிவகாமியின் சபதம்—நாடக காவியம் —கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் | 5 | 00 |
| வாழ்நாளை வளர்ப்பது எப்படி ?—மு. முத்துக்காளத்தி எம். ஏ. | 8 | 25 |
| சிந்தனை மலர்கள்— நாவலர் இரா. நெடுஞ்செழியன் | 13 | 50 |
| நற்றிணைக் காட்சிகள் ,, | 15 | 00 |
| திரு. வி. க. வாழ்வும் தொண்டும் —சக்திதாசன் சுப்பிரமணியம் | 10 | 00 |
| மூலிகை அகராதி —முல்லை முத்தையா | 7 | 00 |
| கல்விச் சிந்தனைகள்—டாக்டர் கே. வெங்கடசுப்பிரமணியம் | 6 | 00 |
| பாரதியைப் பற்றி நண்பர்கள்—ந. அ பத்மநாபன் | 13 | 00 |
| பாரதியார் கண்ட கவிதைத் தலைவி—ஏ. வி சுப்பிரமணியன் | 11 | 50 |
| நினைவாற்றலை வளர்த்துக் கொள்வது எப்படி ? —பி. சி. கணேசன் | 3 | 75 |
| Aphorisms of Valluvar—S. M. Diaz | 20 | 00 |
| Marutham - An Aspect of Love in Tamil Literature —Dr. V. T. Manickam, | 120 | 00 |

## கழகப் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| கெடிலவளம் பேராசிரியர் சுந்தரசண்முகனார் | 7 | 00 |
| பழனி பாலநீதி (முதற்பகுதி) —அருஞ்சொற் பொருள் : புலவர் இரா. இளங்குமரன் | 3 | 50 |
| The Dravidian Element In Indian Culture —Gilbert Slater | 18 | 00 |
| நன்னூல் காண்டிகை உரை—எழுத்ததிகாரம் | 9 | 00 |
| நன்னூல் காண்டிகை உரை—சொல்லதிகாரம் | 9 | 00 |
| வள்ளல் எழுவர் (நாட்டிய நாடகக் காவியம்) கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் | 2 | 50 |
| வையை வளம்—புலவர் இரா. இளங்குமரன் | (அச்சில்) | |

## கழக அகராதி நூல்கள்

| | | |
|---|---|---|
| கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி —பன்மொழிப் புலவர் கா அப்பாத்துரையார் எம்.ஏ., எல்.டி. | 15 | 00 |
| கழகத் தமிழ்க் கையகராதி —சேலை சகதேவ முதலியார் —காழி சிவ. கண்ணுசாமிப் பிள்ளை | 10 | 00 |
| கழகத் தமிழ்—தமிழ் அகராதி—சு. அ. இராமசாமிப் புலவர் | 60 | 00 |